

- சுவையானது
- சிக்கனமானது
- எளிதில் தயாரிக்கக் கூடியது




## The Rasna Spread Maker Cricket Bonanza

முந்துங்கள் குழந்தைகளே! சலுகை டிசம்பர் 31, 1996 வரையே.



5 கூப்பன்களுக்காக 25 கார்டுகள் கொண்ட ஒரு செட்*




10 கூப்பன்களுக்காக ஒரு பரவசமூட்டும் கிரிக்கெட் கேம்*

**CRICKET COUPON**

SEND
5 coupons for a set of 25 Cricketer Cards
10 coupons for an exciting Cricket Game

Send your coupons to P.O.Box No. 4225
Ahmedabad 380 009.
Offer valid till 31st December 1996.
Packs also available without this offer.

SPECIMEN

* ரஸ்னா ஸ்பிரெட் மேக்கர் பேக்குகளிலிருந்து கிரிக்கெட் கூப்பன்களைக் கத்தரித்து த.பெ.எண் : 4225, அஹமதாபாத்-380009 என்ற முகவரிக்கு அனுப்புங்கள்.

Mudra:EAMR:9400 Tam




# அம்புலிமாமா

நிறுவனர்: **'சக்கரபாணி'** நிர்வாக ஆசிரியர்: **நாகிரெட்டி**



## மாணவர் தேர்தல்களில் அரசியல்

முன்பெல்லாம் ஒரு பள்ளியில் உயர் வகுப்பில் நன்கு படித்து முதலாவதாக வரும் மாணவனைப் பள்ளித் தலைமை ஆசிரியரும், வகுப்பில் நன்கு படித்து முதலாவதாக வரும் மாணவனை வகுப்புத் தலைவனாக அந்த வகுப்பின் ஆசிரியரும் நியமித்து வந்தார்கள். இதனால் அப்பதவிகளைப் பெறப் போட்டி போட்டுக் கொண்டு படித்தனர்.

அப்போதெல்லாம் ஒரு பள்ளியின் மொத்த மாணவர்கள் மிகக் குறைவு. அதனால் இந்த நியமனங்கள் எளிதாக நடைபெற்றன. ஆனால் இப்போதோ ஒவ்வொரு பள்ளியிலும் 3000க்கும் மேலாக மாணவர்கள் இருக்கிறார்கள். இவர்கள் சங்கங்களை அமைத்து அரசியல் கட்சிகளின் அடிப்படையில் தேர்தல்கள் நடத்தித் தம் தலைவரையும் செயலாளரையும் தேர்ந்தெடுக்கிறார்கள். இதனால் அரசியல்வாதிகளின் குறுக்கீடுகள் அதிகமாகி மாணவர்களின் படிப்பு கெட்டு வருகிறது.

இப்போது பெற்றோர்கள் மாணவ சங்கங்களில் அரசியல் இருக்கக் கூடாதெனக் கூற ஆரம்பித்து விட்டனர். ஆம் பள்ளிகள் படிக்கும் இடமாகத்தான் இருக்க வேண்டும். அரசியல் போர்க்களமாக மாறி விடக் கூடாதுதான்.



**மதிமுகம்: 99** **அக்டோபர் 1996** **புன்னகை: 4**

**தனிப்பிரதி: ரூ.6.00** **வருட சந்தா: ரூ.72.00**



# வேண்டும்! வேண்டும்!
# ரஸ்னா ட்ரிங்க்மேன்



''வேண்டும் வேண்டும் குளிர்ச்சி வேண்டும்
வேண்டும் வேண்டும் குடிக்க குளிர்ச்சி எப்போதும் வேண்டும்
வேண்டும் வேண்டும் டிரிங்க்மேன் வேண்டும்
வேண்டும் வேண்டும் டிரிங்க்மேன் ஸ்ட்ராவுடன்
வேண்டும் வேண்டும் டிரிங்க்மேன் என்னுடன்
வேண்டும் வேண்டும் விடுதலை வேண்டும்''

வந்துவிட்டது நண்பர்களே! ஒரு **ரஸ்னா**
ட்ரிங்க்மேன் வாட்டர் பாட்டில் இலவசமாகப்
பெறலாம், மூன்று 32 பேக்குகள்* ரஸ்னா ஸாஃப்ட்
டிரிங்க் கான்சென்ட்ரேட் வாங்கும்போது.

குளிர்ச்சியால் ஒன்று
குடிக்கலாம் எங்கேயும்,
எந்த நேரத்திலும்.
உடனே உங்கள்
அருகிலுள்ள டீலரை அணுகவும்.
துடிப்பான தலைமுறையுடன் இணையவும்.




* விசேஷ வாட்டர் பாட்டில் பேக்குகளின் மேல் மட்டும் இச்சலுகை உரித்தாகும். இச்சலுகை இல்லாத ரஸ்னா பேக்குகளும் கிடைக்கின்றன.

Mudra:EAMR:9524 Tam.

# இரண்டாவது முறையாக எல்ட்சின் அதிபர்!

**போ**ரிஸ் எல்ட்சின் ஆகஸ்ட் 9ல் இரண்டாவது முறையாக ரஷ்ய அதிபராக பதவிப் பிரமாணம் செய்தார். மாஸ்கோவில் க்ரெம்லின் காங்கிரஸ் மாளிகையில் 5000 பேர்களுக்கு முன் எளிய முறையில் இந்தப் பதவி ஏற்பு நிகழ்ச்சி பதினைந்தே நிமிடங்களில் நடந்து முடிந்தது. இதற்குக் காரணம் அப்போது எல்ட்சினின் உடல் நிலை சரியாக இல்லாதது தான். ஜூலையில் நடந்த தேர்தலில் எல்ட்சின் தேர்ந் தெடுக்கப்பட்டதாக அறிவிக் கப்பட்டது. உடனே அவர் மருத்துவமனைக்குப் போய் 15 நாட்கள் தங்கி ஓய்வு எடுத்துக் கொண்டு ஆகஸ்ட் 6ல் தம் அலுவலகத்திற்கு வந்தார். பிறகு ஆகஸ்ட் 9ல் அவர் பொறுப்பேற்றார்.



ஜூன் 16ல் நடந்த தேர்தலில் எல்ட்சினுக்கோ அவரை எதிர்த்துப் போட்டியிட்ட கம்யுனிஸ்ட் கட்சி வேட்பாளர் கென்னடி ஜிக்னோவுக்கோ போதிய பெரும்பான்மை வாக்குகள் கிடைக்கவில்லை. தேர்தலில் எல்ட்சின் வெற்றி பெற முடியாது என்றே கருதப்பட்டது. அவரது உடல் நலக் குறைவு, பெடரேஷனின் சேசன்யா கலகம், அதை வெற்றிகரமாக அடக்கிய முறை, இப்போரால் ஏற்பட்ட நாட்டின் பொருளாதாரச் சீர் குலைவு என்ற அம்சங்கள் அவரது வெற்றியைப் பாதிப்பனவாக இருந்தன.

ஜனவரியில் நடந்த நாடாளுமன்றக் கீழ்சபைத் தேர்தலில் சபா நாயகர் பதவிக்கு கம்யூனிஸ்ட் கட்சி வேட்பாளர் தேர்ந் தெடுக்கப்பட்டார். 1991ல் சிதைவுற்ற சோவியத் யூனியனில் மீண்டும் தலை தூக்க கம்யூனிஸ்ட் கட்சி இந்த அரிய வாய்ப்பைப் பயன்படுத்திக் கொள்ள முயன்றது. தான் ஆட்சிக்கு வந்தால் பழையபடி சோவியத் யூனியனை ஒன்று சேர்த்துக் காட்டுவதாக கம்யுனிஸ்ட் வேட்பாளர் ஜக்னொவ் பிரசாரம் செய்தார். முன்னாள் அதிபர் கோர்பசேவ் ஜனநாயக முறை வேண்டுமெனக் கூறி அதிபர் தேர்தலில் போட்டியிட்டார்.

தேர்தலுக்கு முன் ஜூனில் நடந்த வாக்குக் கணிப்பில் எல்ட்சினுக்கு 35 சத வாக்குகளும் ஜக்னாவுக்கு 24 சத வாக்குகளும் கிடைத்தன. இதனால் மீண்டும் எல்ட்சினே ரஷ்ய அதிபராவார் என்பது உறுதியாகி விட்டது.

அதிபர் தேர்தலுக்காக மறுமுறை நடந்த தேர்தலில் எல்ட்சின் தேர்தல் விதிகளின் படி போதிய அதிகப் படியான வாக்குகளால் அவர் இரண்டாவது முறையாக ரஷ்ய அதிபராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.



# பதிலுக்கு பதில்!

கள்ளிப்பட்டியில் பெரும் பண்டிதர் காசிநாதர். ஒருமுறை அவருக்குத் தம் ஊருக்குச் சமீபத்திலுள்ள நகரமானதிருப்பூருக்குப் போக வேண்டியதாயிற்று. அவரது ஊரிலிருந்து திருப்பூருக்கு காட்டுப் பாதையில் நடந்தே போய்விடலாம். வண்டியில் போவது சுற்று வழி. அவரால் அவ்வளவு தூரம் நடக்க முடியாததால் அவ்வூரில் வாடகைக்குக் குதிரை வண்டி ஓட்டும் குப்பனிடம் முன் கூட்டியே ஓரிடம் வண்டியில் தனக்கு வைத்திருக்கும் படிச் சொல்லி அனுப்பியிருந்தார்.

குப்பனின் குதிரை வண்டியில் ஐந்து பேர் உட்கார்ந்து செல்ல முடியும். அவன் நகருக்குப் போக நான்கோ அல்லது ஐந்து பேர்களோ சேர்ந்தால் தான் வண்டியை ஓட்டிச் செல்வான் காசிநாதர் சொல்லி அனுப்பிய போது அவனுக்கு மூன்று பயணிகள் கிடைத்து விட்டதால் பண்டிதரோடு நான்கு பயணிகள் அன்று கிடைத்து விட்டார்கள் என்று மகிழ்ந்து மூன்று பயணிகளை ஏற்றிக் கொண்டு காசி நாதரின் வீட்டிற்கு வந்தான்.

காசிநாதரும் தம் சிறு பெட்டியுடனும் தண்ணீர்க் கூஜாவுடனும் தயாராக நின்று கொண்டிருந்தார். குப்பனின் வண்டி தம் வீட்டு வாசலில் வந்து நின்றதும் அவர் தன் பெட்டியை வண்டியின் அடிப்பகுதியில் புல் வைக்கக் கட்டப்பட்டிருக்கும் வலைக்குள் போட்டு விட்டுக் கூஜாவுடன் வண்டிக்குள் ஏறி உட்கார்ந்தார். வண்டியில் இருந்த மூவரையும் பண்டிதர் அறிந்தவரே, முன் பக்கம் கந்தசாமியும், துரைசாமியும் உட்கார்ந்திருந்தனர். அவர்களை அடுத்து பரமசிவம் ஒரு பெட்டியை வைத்துக் கொண்டு உட்கார்ந்திருந்தான்.

பண்டிதர் வண்டியில் ஏறி உட்கார்ந்ததும் குப்பன் வண்டியை ஓட்டலானான். தமக்கு உட்கார வசதியாக இருக்க அவர் தம் காலை நீட்டினார்.

–சிவனார் செல்வன்–

அது பரமசிவம் வைத்திருந்த பெட்டியில் பட்டது அதை அவர் தன் காலால் இன்னும் சற்று தள்ளி விட்டு நன்றாக உட்கார்ந்தார்.

அப்போது பரமசிவம் அவரிடம் ''பண்டிதரே! பெட்டியில் கடவுள் விக்கிரகம் இருக்கிறது. அதனால் பெட்டியை உதைக்காமல் காலை மடக்குங்கள்'' என்றான். பண்டிதரும் அப்பெட்டியைத் தொட்டு கண்களில் ஒற்றிக் கொண்டு தம் கால்களையும் மடக்கிக் கொண்டார். ஆனால் அப்படியே வெகு நேரம் அவரால் உட்கார்ந்திருக்க முடியவில்லை.

அதனால் அவர் பரமசிவத்திடம் ''ஐயா, உங்கள் பெட்டியைக் கொஞ்சம் உட்புறமாக நகர்த்திக் கொள்ளுங்கள். அப்போது நானும் உங்களைப் போலக் கால்களை நீட்டிக் கொள்வேன். இப்போதுள்ள சிரமம் அப்போது இராது'' என்றார். ஆனால் பரமசிவம் பெட்டியை மேலும் கொஞ்சம் பண்டிதரின் பக்கமாகவே நகர்த்தி ''இது என் பக்கத்திலேயேதான் இருக்க வேண்டும். இதில் எனக்கு வேண்டிய சில முக்கியமான சாமான்கள் இருக்கின்றன. அதனால் இதை என் பக்கத்திலேயேதான் வைத்துக் கொண்டே இருப்பேன். இங்கிருந்து இதை நகர்த்தக் கூடாது'' என்றான்.

பண்டிதர் அப்போது அதன் மீது தன் கைகளை ஊன்றிக் கொண்டார். அப்போது பரமசிவம் ''ஐயா! பெட்டி மீது கையை வைத்து அழுத்துகிறீர்களே! இதனுள் கண்ணாடி சாமான்கள் இருக்கின்றன. அவை நொறுங்கி விடுமே! அதனால் கையை எடுங்கள்'' என்றான். பண்டிதரோ ''இது ஓலைப் பெட்டியல்லவே. நல்ல இரும்புத் தகடாலான பெட்டி. அதனால் உள்ளே உள்ள கண்ணாடிச் சாமான்கள் என் கையை ஊன்றுவதால் உடைந்து ஒன்றும் போகாது'' என்றார்.

பரமசிவமோ ''கண்ணாடி சாமான்





களைப் பெட்டியில் மேலாக வைத்திருக்கிறேன் அதனால் நீங்கள் லேசாகப் பெட்டி மீது கையை ஊன்றினாலும் கண்ணாடி சாமான்கள் நொறுங்கி விடும். ஒருவர் தன்னுடன் பயணம் செய்பவர்களுக்குத் தொந்தரவு கொடுக்கக் கூடாது என்று உங்களுக்குத் தெரியுமா?'' என்று கேட்டான். பண்டிதரும் ''அதையே தான் நானும் சொல்கிறேன். நீங்கள் இந்தப் பெட்டியைக் குறுக்கே வைத்து என்னைச் சிரமப் படுத்துகிறீர்களே. இது சரியா?'' என்று கேட்டார்.

பரமசிவமும் ''பெட்டியில் கடவுள் விக்கிரகமும் கண்ணாடி சாமான்களும் இருப்பதால்தான் இதனை பத்திரமாக என் பக்கத்தில் வைத்துக் கொண்டிருக்கிறேன். இந்தப் பெட்டிக்குப் பதிலாக ஒரு பயணி உட்கார்ந்திருந்தால் இப்படிக் காலை நீட்டவும் கைகளை அவர் மீது ஊன்றவும். உங்களால் முடியுமா? முடியாதே. அதனால் வாயை மூடிக் கொண்டு பேசாமல் வாருங்கள்'' என்றான்.

பண்டிதரும் ''இப்போது தான் பயணி இல்லையே. மேலும் வண்டிக்குள் சாமானைப் போட்டால் பயணிகள் உட்கார இடம் வேண்டாமா? பெட்டி சிறியது தானே. எடுத்து மடியில் வைத்துக் கொள்ளலாமே'' என்று சொல்லிப் பார்த்தார். பரமசிவமோ அதைக் கேளாதவன் போல இருந்து விட்டான்.

பரமசிவத்திடம் எப்படி எடுத்துக் கூறினாலும் அவன் பிடிவாதமாகத் தான் செய்ததே சரி என முரண்டு பிடிப்பான் எனப் பண்டிதர் தெரிந்து கொண்டு அப்போதைக்குப் பேசாமல் இருந்தார்.

வண்டி சற்று தூரம் போனதும் பரமசிவம் ஒரு சுருட்டை எடுத்துக் கொண்டான் அவனிடம் தீப்பெட்டி இல்லாததால் வண்டியிலுள்ள எல்லோரிடமும் கேட்டுப் பார்த்தான். யாரிடத்திலும் தீப்பெட்டி இருக்கவில்லை. அவன் என்ன செய்வதெனத் தெரியாமல் திகைத்தான். இதே சமயம் பண்டிதருக்கு தாகம் எடுத்தது. கூஜாவிலுள்ள தண்ணீரைக் குடிக்கும் போது அதிலுள்ள நீர் வண்டியில் ஆட்டத்தில் ததும்பி மற்றவர்கள் மீது விழும் என நினைத்துப் பண்டிதர் குப்பனிடம் ''குப்பா! வண்டியைக் கொஞ்சம் நிறுத்து. நான் தண்ணீர் குடிக்க வேண்டும்'' என்றார்.

பரமசிவமோ ''வண்டியை நிறுத்தாதே. நான் அவசரமாகத் திருப்பூருக்குப் போயாக வேண்டும். இவர்

தண்ணீர் இப்போது குடிக்காவிட்டால் இவர் உயிர் ஒன்றும் போய் விடாது. நானே சுருட்டைக் கையில் வைத்துக் கொண்டு அதைப் பற்ற வைக்க முடியாமல் தவிக்கிறேன். அது போல் இவரும் தன் தாகத்தை அடக்கிக் கொள்ளட்டும்'' என்றான்.

பண்டிதர் தன் கோபத்தை அடக்கிக் கொண்டு சண்டித்தனம் புரியும் பரமசிவத்திற்குப் பாடம் புகட்ட நினைத்தார். அப்போது வழியில் சற்று தூரத்தில் ஒருவன் நின்று கொண்டு சுருட்டுப்பிடிப்பதை அவர் பார்த்தார். உடனே பரமசிவத்திடம் அவர் ''அதோ பாருங்கள் ஒருவர் சுருட்டுப் பிடித்துக் கொண்டிருக்கிறார். வண்டியை நிறுத்தச் சொல்லலாமா? நீங்கள் அவன் சுருட்டைக் கொண்டு உங்கள் சுருட்டைப் பற்ற வைத்துக் கொள்ளலாம்'' என்றார். பரமசிவமும் மகிழ்ந்து போய் ''நான் போய் சுருட்டைப் பற்ற வைத்துக் கொண்டு வருகிறேன். குப்பா! வண்டியை நிறுத்து. பண்டிதரே! நீங்கள் வேண்டுமானால் இறங்கித் தண்ணீர் குடியுங்கள். எனக்கு எந்த ஆட்சேபணையும் இல்லை'' என்றான்.

பரமசிவம் கேட்டுக் கொண்டபடி குப்பன் வண்டியை நிறுத்தவே. அவன் சுருட்டுப் பிடிக்கும் மனிதனை நோக்கி நடந்தான். பண்டிதர் கீழே இறங்கித் தன் கூஜாவிலிருந்த தண்ணீரைக் குடித்து தாகத்தைத் தீர்த்துக் கொண்டார். ஆனால் பாதையில் நின்றவன் பண்டிதரைக் கண்டு தன் கையிலிருந்த சுருட்டைத் தூர எறிந்து விட்டு மிகவும் பணிவுடன் அவர் முன் வந்து ''ஐயா வணக்கம்'' என்றான்.

பண்டிதரும் ''அடடா! சுருட்டை எறிந்து விட்டாயே. இவர் தன் சுருட்டைப் பற்ற வைத்துக் கொள்ளத்தானே உன்னை நோக்கி வந்து கொண்டிருந்தார்'' எனவே அவனும் ''அப்படியா? நான் எறிந்த சுருட்டுத்துண்டு இங்கே தான் எங்காவது கிடக்கும். அணை





தும் போயிராது. இவர் தேடி எடுத்துக் கொள்ளலாம்'' என்றான்.

பரமசிவமோ ''வேண்டாம். வழியில் கிடக்கும் துண்டு சுருட்டை நான் பொறுக்க மாட்டேன்'' என்று கூறி வண்டிக்குள் ஏறிக் கொண்டான். பண்டிதரும் வண்டியில் ஏறி உட்கார வண்டி நகர்ந்தது. பண்டிதரும் ''உங்களால் சுருட்டுக் குடிக்க முடியாது போனாலும் உங்கள் தயவில் என் தாகம் தணிந்தது'' என்றார். பரமசிவத்திற்கு இது எரிச்சலைத்தான் மூட்டியது.

சற்று தூரம் போனதும் ஒரு கூட்டம் வந்தது. அதில் நடுவிலிருந்தவன் ஒரு தட்டில் நெருப்பை எடுததக் கொண்டு போய்க் கொண்டிருந்தான். பண்டிதர் பரமசிவத்திடம் அதனைக் காட்டி ''நீ குப்பனை வண்டியை நிறுத்தச் சொல்லிக் கீழே இறங்கிப் போய் உன் சுருட்டைப் பற்ற வைத்துக் கொள்ளலாம்'' என்றார். பரமசிவமும் குப்பனிடம் ''குப்பா! வண்டியை நிறுத்து. நான் கீழே இறங்கிச்சுருட்டைப் பற்ற வைத்துக் கொண்டு வருகிறேன்'' என்றான். குப்பனும் வண்டியை நிறுத்தவே பரமசிவமும் இறங்கிப் போய் அக்கூட்டத்தினரிடம் தன் சுருட்டைப் பற்ற வைக்க நெருப்பு கேட்டான்.

அவர்களோ ''இது மாரியம்மன் கோவில் தீமிதி நெருப்பு. சுருட்டைப் பற்ற வைப்பதற்கெல்லாம் இதைக் கொடுக்க மாட்டோம்'' என்று கூறி அவனை அனுப்பி விட்டார்கள். பரமசிவமும் முகத்தைத் தொங்கப் போட்டுக் கொண்டு வந்து வண்டியில் ஏறிக் கொள்ள வண்டியும் நகர்ந்தது.

கொஞ்ச தூரம் போனதும் இன்னொரு கூட்டம் நெருப்புச்சட்டியுடன் வரவே பண்டிதர் அதைப் பரமசிவத்திற்குக் காட்டினார். அவனும் குப்பனை வண்டியை நிறுத்தத் சொல்லி இறங்கிப் போனான். இரண்டொரு நிமிஷத்தில் திரும்பி வந்து ''அது சுடு காட்டிற்குப் போகும் நெருப்பாம். அவர்களும் சுருட்டைப் பற்ற வைத்துக் கொள்ள என்னை அனுமதிக்கவில்லை'' என்று கூறியவாறே பரமசிவம் வண்டியில் ஏறிக் கொண்டான்.

கொஞ்ச தூரம் போனதும் ஒருவன் நெருப்பு மூட்டி எதையோ வாட்டிக் கொண்டிருந்தான். பரமசிவம் அதைக் கண்டு மகிழ்ந்து போனான். பண்டிதரும் அவனிடம் ''உனக்கு அங்கே நெருப்பு கிடைக்கும். வேண்டுமானால் வண்டியை நிறுத்தி அங்கே போய்ப்பார். அதிர்ஷ்டம் இருந்தால் உன்பாடு யோகம்தான்'' என்றார்.

பரமசிவமும் குப்பனிடம் வண்டியை நிறுத்த சொல்லி கீழே இறங்கினான். அவன் நெருப்பு எரிந்து கொண்டிருந்த இடத்தை அடைந்த போது ஒருவன் அதில் பன்றி மாமிசத்தை வாட்டிக் கொண்டிருப்பதைப் பார்த்து முகத்தைச் சுளித்துக் கொண்டு திரும்பி வந்தான்.

பண்டிதரும் அவனுக்கு நெருப்பு கிடைக்காததை அறிந்து கொண்டு "சரி. வண்டியில் உட்கார். வழியில் இன்னும் எங்காவது உனக்கு நெருப்பு கிடைக்காமலா போகும்? பார்க்கலாம்" என்றார். பரமசிவமும் வண்டியில் ஏறி உட்காரவே வண்டியும் நகர்ந்தது.

வண்டி சற்று தூரம் போனதும் வழியில் ஒருவன் அதனை நிறுத்திப் பண்டிதரை வணங்கவே அவரும் அவனிடம் கேட்டு நெருப்புப் பெட்டி வாங்கிப் பரமசிவத்திடம் கொடுத்தார். வண்டி நகர்ந்ததும் பரமசிவம் சுருட்டை எடுத்து வாயில் வைத்துக் கொண்டு அதைப் பற்ற வைக்க நெருப்புப் பெட்டி எடுத்தான்.

பண்டிதரோ "ஐயா! எனக்கு இந்த சுருட்டு நாற்றம் பிடிக்காது" என்றார். அப்போது பரமசிவம் "அப்படியானால் நான் வண்டியை நிறுத்திக் கீழே இறங்கி சுருட்டுப் பிடிக்கிறேன். அதுவரை வண்டி நிற்கட்டும்" என்றான். பண்டிதரோ "முடியாது. நான் அவசரமாக முகூர்த்த வேளைக்குள் திருப்பூரை அடைந்து விட வேண்டும். இங்கே தாமதமானால் என் வேலை கெட்டு விடும் இப்படி அற்ப வேலைக்கெல்லாம் வண்டியை நிறுத்தக் கூடாது" என்றார்.

அப்போது பரமசிவம் "நீங்கள் தண்ணீர் குடிக்கும் வரை வண்டி நிற்கவில்லையா?" என்று கேட்க பண்டிதரும் "அப்போதும் அதற்கு பிறகும் நீங்கள் சொல்லித்தான் வண்டி நின்றது. மேலும் நீங்களே என்ன சொன்னீர்கள்? கூடப் பயணம் செய்யும் பயணிகளுக்குத் தொந்தரவு கொடுக்கக் கூடாது என்றுதானே? இந்த சுருட்டை குடிக்காமல் போனால் உங்கள் உயிர் ஒன்றும் போய் விடாது" என்றார்.

இதைக் கேட்டு வண்டியிலிருந்த மற்றவர்கள் பலமாகச் சிரித்தார்கள். பரமசிவம் அவமானத்தால் தலை குனிந்து கொண்டான்.



# இவன்தான் ஏற்றவன்

குந்தமலை ஜமீன்தாரருக்கும் கணக்கு வழக்கிலும் வீட்டு விவகாரங்களிலும் சாமர்த்தியமாக் நடந்து நிர்வகிக்க ஒரு உதவியாளர் தேவைபட்டது. அதனால் ஜமீனின் திவான் அது பற்றிப் பல ஊர்களில் பறை சாற்றுவித்தார். ஒரு குறிப்பிட்ட நாளில் அந்த வேலைக்கு மனு செய்தவர்கள் ஜமீன்தாரரின் மாளிகைக்கு வரலாம் என்று அறிவிக்கப்பட்டது.

ஜமீன்தாரரும் திவானும் வந்த மனுதாரர்களிடம் ஒரே கேள்வியைக் கேட்டார்கள். பத்தடி ஆழமும் பத்தடி நீள அகலமுள்ள குழிக்குள் நீ விழுந்து விட்டால் என்ன செய்வாய் என்பதே அக்கேள்வி. எல்லோருமே ''யாராவது வந்து உதவி மேலே எடுத்து விடுங்கள் என்று கத்து வோம்'' என்ற ஒரே பதிலைக் கூறினார்கள்.

ஆனால் ஒருவன் மட்டும் ''அக்குழியில் ஏணி இருக்குமா?'' என்று கேட்டான். திவானும் இல்லை எனவே அவன் ''அக்குழியில் நான் விழுந்தது பகலிலா அல்லது இரவிலா?'' என்று கேட்டான். திவானோ ''இது அநாவசியக் கேள்வி'' எனவே அவன் ''இல்லை. இது மிக அவசியமான கேள்வி. பகலில் குழியில் நான் விழுந்தவன் என்றால் நான் குருடனாக இருக்க வேண்டும். நானோ குருடன் இல்லை. அதனால் நான் ஏன் குழியில் விழப் போகிறேன்?'' என்றான்.

அது கேட்டு ஜமீன்தாரரும் திவானும் மகிழ்ந்து அவனுக்கே வேலையைக் கொடுத்தார்கள்.






## 15

*(தீரமதி வீட்டிற்கு வந்ததும் தன் தந்தையைப் பற்றி மட்டும் கூறாமல் மற்ற விஷயங்களைக் கூறினான். அன்று அவனோடு பைலாஸிலிருந்து வந்த ஒரு பேரறிஞர் விருந்துண்ண அவனது இல்லத்திற்கு வந்தார். வழக்கம் போலக் கூடும் கயவர்களும் அங்கு சாப்பிட வந்தனர். அப்போது அங்கு ரூபதரன் கிழப் பிச்சைக்காரனின் வேடத்தில் அங்கு வந்தான். அவன் தீரமதி போட்ட உணவை எடுத்துச் சாப்பிட்டு விட்டு அவன் மற்றவர்களின் முன் போய் நின்று கை நீட்டி சாப்பிடக் கொடுக்குமாறு கேட்டான். அப்போது—)*

அங்கு கூடி வயிறு புடைக்கத்தின்னும் கயவர்கள் அக்கிழவனின் மீது இரக்கம் கொண்டார்கள். அவர்கள் தம் கைக்குக் கிடைத்த உணவை எடுத்து அவனுக்குக் கொடுத்தார்கள். சிலர் அக்கிழவன் யாரென்று ஆச்சரியத்துடன் பார்த்தனர்.

அப்போது அங்கிருந்த ஆடு மேய்க்கும் காலன் ''ஐயன்மார்களே! நான் இக்கிழவனை இங்கு வருவதற்கு முன் வழியில் பார்த்தேன். இவனை இந்த வீட்டின் பன்றி மேய்ப்பவன்தான் அழைத்து வந்தான்'' என்றான். இதைக் கேட்டதும் துர்புத்தி பன்றி மேய்ப்பவனைப் பார்த்து ''அடே! உனக்குக் கேடுகாலம் வந்து விட்டதா? இந்த ஊரில் திரியும் பிச்சைக்காரர்களும் சோம்பேறிகளும் போதாது என்று இவனையும் நீ அழைத்து வந்திருக்கிறாயா? இவன் உன் எஜமானனின் சொத்தைக் கரைக்க வேண்டுமா?'' என்று கேட்டான்.

பன்றி மேய்ப்பவனோ ''ஐயா! நீங்கள் எவ்வளவு பெரிய மனிதராக இருந்



தாலும் எங்களைப் பற்றி இப்படித் தாறு மாறகப் பேசக்கூடாது. யாராவது பிச்சைக்காரனை வேண்டுமென்றே அரண்மனைக்குள் அழைத்து வருவார்களா? நான் என் எஜமானிக்குத்தான் கட்டுப்பட்டவன். மற்றவர்கள் எனக்கு எதுவும் அநாவசியமாகக் கூறத் தேவையில்லை'' என்றான்.

தீரமதி பன்றி மேய்ப்பவனிடம் ''நீ ஏன் வீணாக வார்த்தைகளைக் கொட்டுகிறாய்? அவருக்குத் தெரிந்தது அவ்வளவுதான். இவரைப்போல இன்னும் சிலரும் இருக்கத்தான் இருக்கிறார்கள்'' என்றான். பிறகு அவன் துர்புத்தியைப் பார்த்து ''இப்போது நீ என்ன செய்யவேண்டுமென்று சொல்கிறாய்? நாம் வலிமை மிக்கவர்களாதலால் இந்தக் கிழவனைக் கழுத்தைப் பிடித்து வெளியே தள்ள வேண்டும் என்றுதானே? ஆனால் அதுதான் நடக்காது. நீ தாராளமாக எதை வேண்டுமானாலும் சாப்பிடு. எதை வேண்டுமானாலும் கொடு. நான் தடுக்க மாட்டேன். ஆனால் இதைத்தான் நீ செய்ய மாட்டாயே'' என்றான்.

துர்புத்தியோ ''அடேயப்பா! ஒரு பெரிய சொற்பொழிவையே ஆற்றி விட்டாயே. இந்தக் கிழவனுக்குக் கொடுக்க வேண்டியதைக் கொடுத்து அனுப்பினால் இவன் மறுபடியும் இங்கே தலை காட்ட மாட்டான்'' என்று கூறித் தன் காலின் பக்கமிருந்த ஒரு பலகையை எடுத்து கொண்டான்.

கிழ வேடத்திலிருந்த ரூபதரன் எல்லோரிடமும் கை நீட்டிக் கிடைத்ததை வாங்கித் தன் பையில் போட்ட வாறே துர்புத்தியை அணுகினான். அவனிடம் ''ஐயா! இங்குள்ளவர்களில் நீங்கள்தான் தரும துரையாகத் தென்படுகிறீரகள். அதனால் கை நிறைய அள்ளிக் கொடுங்கள். ஒரு காலத்தில் நானும் உங்களைப் போல உயர் நிலையில் இருந்தவனே. எனக்கும் பல வேலைக்காரர்களும் இருந்தார்கள். ஆனால் தேவதைகள் என் மீது கோபம் கொண்டு என்னைக் கடற் கொள்ளைக்காரனாக மாற்றி விட்டார்கள். எகிப்தில் என் ஆட்களெல்லாம் எதிரியின் கையில் அகப்பட்டு மடிந்து போனார்கள். நான் அவர்களுக்கு அகப்படாமல் தப்பிப் பல நாடுகளில் திரிந்தவாறே இங்கு வந்தேன்'' என்றான்.

துர்புத்தியோ ''இதென்ன ஒரே பிடுங்கல்! தலை வேதனையாய் இருக்கிறது! சரியாகச் சாப்பிடக் கூட விட மாட்டானா இவன்? அடே

உன்னை மறுபடியும் எகிப்திற்கே அனுப்புகிறேன். யார்யாரோ கொடுத்தார்களென்றால் அது அவர்கள் சொத்தா? உம். முதலில் என்னைவிட்டுச் சற்று விலகி நில்'' என்றான்.

கிழவனோ ''பார்ப்பதற்குப் பெரிய மனிதன் போல இருக்கிறாய். ஆனால் உனக்கோ அல்ப புத்தி. நீ யார் பணத்தில் இப்போது சாப்பிடுகிறாய்? உன் பணமா? இல்லையே. இதிலிருந்து கொஞ்சம் கொடுக்க மனமில்லாத நீயா உன் பணத்திலிருந்து கொடுப்பாய்?'' என்றான்.

இதைக் கேட்ட துர்புத்தி ஆத்திரம் கொண்டான். ஆத்திரம் கொண்டு அக்கிழவனை பலமாக அடித்தான். கிழவனோ அந்த அடியால் சற்றும் வேதனைஅடையாததோடு பலமாகச் சிரித்தான். அதைக் கண்ட துர்புத்திக்குக் கோபமே அதிகரித்தது. அவன் அக்கிழவனைப் பார்த்து ''அடே! நான் கொடுத்த அடி போதாதா? இன்னும் வேண்டுமா?'' என்று கர்ஜித்தான்.

கிழவனோ ''பெரிய மனிதா! உன்னால் என்னை ஒன்றும் செய்ய முடியாது. நான் திருப்பி உன்னை அடித்தால் உன்னால் தாங்கிக் கொள்ளவும் முடியாது. ஆனால் இப்போது நான் உன்னை அடிக்காமல் விட்டு விடுகிறேன்'' என்றான். அதைக் கேட்ட துர்புத்தி ''கிழவா! இன்னமுமா உன் வீராப்பு! போ. பேசாமல் கிட. உன்னை இனிமேல் நான் அடித்தால் செத்த பாம்பை அடிப்பது போலாகும். அதனால் நான் அடிக்க மாட்டேன். நீ ஒரு ஓரமாய்ப் போய்ப் படு'' என்றான். கிழவன் ஒரு ஓரமாகக் கிடக்கவே துர்புத்தியும் மற்றவர்களும் பலமாகச் சிரித்து வழக்கம் போலக் குடித்துக் கும்மாளம் போடலானார்கள்.



பன்றி மேய்ப்பவன் பத்மமுகியைக் கண்டு சொல்ல வேண்டிய தகவலைக்கூறி விட்டு வந்து தீரமதியைக் கண்டான். அவனிடம் ''சின்ன எஜமானே! நான் இனிப் புறப்படுகிறேன். அந்தக் கிழவனை ஜாக்கிரதையாக பார்த்துக் கொள்ளுங்கள். அந்த துர்புத்திதான் அவனை எவ்வளவு பலமாக அடித்து விட்டான்!'' என்றான். தீரமதியும் ''கிழவனைப் பற்றிக் கவலைப்படாதே நீ சாப்பிட்டு விட்டுப் போ'' என்றான்.

பன்றி மேய்ப்பவனும் சாப்பிட்டு விட்டுக் கிளம்பினான். அங்கு கூடியிருந்த கயவர்களின் அட்டகாசமோ அதிகரித்தது. அப்போது அங்கு ஒரு பிச்சைக்காரன் வந்தான். அவனை

அந்நகரமே நன்கு அறியும். ஏனெனில் ஏதாவது ஒரு செய்தியை சொல்லி அனுப்ப அவனை அவ்வூரார் பயன் படுத்தி வந்தார்கள். அவனை தூதன் என்ற பெயரிட்டு அழைத்து வந்தார் கள்.

அவன் உள்ளே வந்ததும் கிழவன் வேடத்திலுள்ள ரூபதரனைப் பார்த் தான். தனக்குப் போட்டியாக வந் தானே என்று ஆத்திரத்தோடு தூதன் அவனைப் பார்த்து ''அடே! யாரடா நீ? மரியாதையாக இங்கிருந்து நீயே போகப் போகிறாயா அல்லது நான் உன்னை உதைத்து விரட்டட்டுமா?'' என்று உறுமினான்.

அதற்கு ரூபதரன் ''ஏனப்பா? உன்னை நான் ஏதாவது சொன் னேனா? நீயும் என்னைப் போன்றவன் தானே! என்னை உதைத்து விரட்டி விட உன்னால் முடியுமா? கொஞ்சம் யோசித்துப் பேசு'' என்றான். தூதனோ ''ஏய் கிழவா! எழுந்து நிற்கக்கூட முடி யாத நீ என்ன பேச்சு பேசுகிறாய்? முதலில் நீ எழுந்து வா. யார் யாரை உதைத்து விரட்டப் போகிறார்கள் என் பதை அப்போது பார்த்து விடலாம்'' என்றான்.

இரண்டு பிச்சைக்காரர்கள் தெரு நாய்கள் போலச் சண்டை போடத் தயாராவது கண்டு துர்புத்தி ஒரேயடி யாக மகிழ்ந்து போனான். அவன் தன் நண்பர்களிடம் ''இவர்கள் இருவரை யும் மோதவிட்டு யார் ஜெயிக்கிறார் களென்று பார்க்கலாமா? நமக்கும் ஒரு பொழுது போக்காக இருக்கும்'' என் றான்.

அதைக் கேட்டு எல்லோரும் ''ஓ! அப்படியே செய்யலாம்'' என்று கூறி அந்த இரு பிச்சைக்காரர்களினருகே வந்தார்கள். துர்புத்தி அவ்விருவரிட மும் ''நீங்கள் இருவரும் சண்டை போடுங்கள். உங்களில் யார் வெல் கிறானோ அவன் இன்றிரவு இங்கே தங்கி வயிறு முட்டச் சாப்பிடலாம்.



தோற்றவனை இங்கே இருந்து துரத்தி விடுவோம்'' என்றான்.

ரூபதரனும் ''ஐயன்மார்களே! நானோ கிழவன், நான் இவனுடன் சண்டையிடும் போது நீங்கள் யாரும் இவனுக்கு உதவக்கூடாது. இந்த வாக் குறுதியை நீங்கள் எனக்கு அளித்தால் தான் இவனோடு சண்டை போடத் தயார்'' என்றான். அவர்களும் அவன் கோரியபடி வாக்களித்தார்கள். தீரமதி யும் ''கவலைப்படாதே. நான் இந்த வீட்டின் தலைவன். உனக்கு யாரும் கெடுதல் செய்ய மாட்டார்களென்று நான் உறுதி கூறுகிறேன்'' என்றான்.

கிழவனாக இருந்த ரூபதரன் தன் கிழிந்த ஆடைகளைக் கைகளிலும் கால்களிலும் கட்டிக் கொண்டான். அவனது உறுதியான கால்களையும் உடலையும் கண்டு எல்லோரும் ஆச் சரியப்பட்டார்கள். தூதன் இவனிடம் செம்மையாக உதை வாங்கத்தான் போகிறான் என எண்ணி அவர்கள் சற்று கவலையும் பட்டார்கள். தூத னின் கை கால்களும் நடுங்கலாயின. அவனது ஆடைகளைக் கழற்ற சில பணியாட்கள் உதவினார்கள். ரூபதர னின் முன் அவனைத் தள்ளி நிறுத் தினார்கள்.

ரூபதரன் அவனை ஒரே குத்தில் கீழே வீழ்த்தித் துடிக்க வைக்கலாமா என்று யோசிக்கலானான். ஆனால் அப்படி செய்து எங்காவது தூதனின் உயிர் போய் விட்டால் எல்லோரும் தன் மீது பாய்வார்கள் என எண்ணி அவனை லேசாக ஒரு தட்டு தட்டுவது என்று எண்ணிக் கொண்டான்.

இருவரும் எதிர் எதிராக நின்றனர். தூதன் ரூபதரனின் கையைப் பிடிக்க முயன்ற போது ரூபதரன் அவனது தாடையில் லேசாக அடித்தான். அந்த அடியில் அவனது வாயிலிருந்து ரத்தம் குபுகுபுவென்று கொட்டியது. தூதன் கீழே விழுந்து துடிக்கலானான். கூடி யிருந்தோர் கை தட்டிச் சிரித்தார்கள்.





ணுக்கு எதாவது கெடுதல் ஏற்பட்டால் நம் பெயரல்லவா கெட்டு விடும்'' என்றாள்.

தீரமதியும் ''அம்மா! நீ சொல்வது சரியே. முதலில் இந்த தூதன் தான் அந்தக் கிழவரை வம்புக்கு இழுத்தான். அதற்குச் சரியான தண்டனையையும் அனுபவித்துக் கொண்டிருக்கிறான்'' என்றான்.

அப்போது சற்று தூரத்தில் நின்ற விபுலயோதன் என்பவன் பத்மமுகியைப் பார்த்து ''அடடா! உன் அழகைப் பார்த்துக் கொண்டே என்றென்றைக்கும் இங்கேயே இருந்து விடலாம் போலிருக்கிறது. உண்மையிலேயே உலகிலேயே நீதான் பேரழகி'' என்றான். பத்மமுகியோ ''என் கணவர் காணாது போனதிலிருந்து என்னை விட்டுப் பிரிந்து போகும் போது அவர் இறந்து விட்டால் என்னை யாராவது மணம் புரிந்து கொள்ளும்படிக் கூறிப் போனது என்னவோ உண்மைதான். ஆனால் என் சுயம்வரம் இவ்வளவு கேவலமாக நடக்குமென்று நான் நினைக்கவில்லை. உலகில் மணமகன் தான் மணமகளுக்குப் பணமும் நகைகளும் பண்டங்களுமாகக் கொடுப்பது வழக்கம். ஆனால் மணமகன் தான் மணக்கப் போகிறவளின் வீட்டில் வருடக்கணக்கில் உட்கார்ந்து கொண்டு அவளுடைய ஆடுகளையும் பன்றிகளையும் கொன்று தின்பதை நான் இங்குதான் பார்க்கிறேன்'' என்றாள்.

துர்புத்தியும் ''பத்மமுகி! நீ சொல்வது சரியே. நீ கேட்கும் பொருள்களை நாங்கள் கொடுக்கிறோம். ஆனால் நீ எங்களில் ஒருவரை மணந்தே ஆக

ரூபதரன் தூதனின் இரு கால்களையும் பிடித்துத் தரதரவென்று இழுத்துப் போய் வாசலருகே சுவரின் பக்கம் உட்கார வைத்தான். அவனது தடியை அவன் கையில் கொடுத்து ''உள்ளே நாயோ பன்றியோ வந்து விடாமல் காத்துக் கொண்டிரு'' என்று ரூபதரன் கூறிவிட்டுத் திரும்பத் தன் இடத்திற்கு வந்தான்.

என்றுமில்லாத வழக்கமாக அன்று பத்மமுகி எல்லோரும் அமர்ந்து சாப்பிடும் இடத்திற்கு வந்தாள். எல்லோரும் அவளது அழகைக் கண்டு வியந்து கொண்டிருந்தார்கள்.

அவள் தீரமதியைப் பார்த்து ''மகனே! நீயும் இவர்களைப் போல ஆகிவிட்டாயா? நம் வீட்டிற்கு வந்தவர்களை எப்படி நடத்துவது என்று தெரிய வேண்டாமா? அந்த மனித

வேண்டும்'' என்றான். இதன் பிறகு எல்லோரும் பல விதமான பொருள்களைக் கொண்டு வந்து பத்மமுகியின் முன் வைத்தார்கள். பத்மமுகியும் அவற்றையெல்லாம் எடுத்து வரும்படித் தன் வேலையாட்களிடம் கூறி விட்டு தனது அறைக்குச் சென்றான்.

இருட்டியதும் தீவட்டிகள் ஏற்றப்பட்டன. அவ்வீட்டில் கூடிய கயவர்கள் எப்போதும் போல உண்டு மது அருந்தினார்கள். விபுலயோதன் ரூபதரனிடம் ''உனக்கு ஏதாவது வேலை தருகிறேன். ஆனால் நீ அதை ஒழுங்காக செய்வாயா?'' என்று கேட்டான்.

ரூபதரனும் ''நான் எந்த வேலையும் செய்வேன். உன்னால் என்னோடு போட்டி போட முடியுமா?'' என்று கேட்டான். இதனால் கோபம் கொண்டு விபுலயோதன் அவன் மீது ஒரு பலகையை விட்டெறிந்தான். ஆனால் ரூபதரன் சட்டென விலகி நிற்கவே அது வேறொருவன் மீது விழுந்தது. அடிப்பட்டவன் அலறவே எல்லோரும் ஓவென்று கத்தினார்கள்.

கிழவனோ ''நான் எதுவும் பேசாமல் இருக்க இவன்தானே என்னை வம்புக்கு இழுத்து என் மீது பலகையை விட்டெறிந்தான். என் மீது அடிபடாமலிருக்க நான் விலகினேன். அது வேறொருவன் மீது பட்டு விட்டது. அதற்கு நான் என்ன செய்வது? இவன்தானே காரணம்'' என்றான். ஆனால் அங்கு கூடி இருந்தவர்கள் ரூபதரன் கூறியதை ஏற்காமல் ''இவர் அடித்தால் நீ அந்த அடியை வாங்கிக் கொண்டிருக்க வேண்டும். நீ விலகிக் கொண்டு வேறொருவர் மீது விழும்படிச் செய்தது உன் தவறுதான்'' என்று அடாவடி பிடித்தார்கள். கிழவனோ ''இவன் செய்த தவறைக் கண்டிக்காமல் என்னைக் குறை கூறுகிறீர்களே. இது என்ன நியாயம்? இந்த அநியாயத்தைக் கேட்க இங்கு யாரும் இல்லையா?'' என்று கத்தி னான்.

தீரமதி உரத்த குரலில் ''இதென்ன கூச்சல்? பைத்தியம் பிடித்தவர்களைப் போலக் கத்துகிறீர்களே. சாப்பிட்டு முடித்தாகி விட்டது. இனி எல்லோரும் போய்ப் படுத்துக் தூங்குகள் என மிரட்டினான். எல்லோரும் உடனே அங்கிருந்து சென்றார்கள். தீரமதியும் ரூபதரனும் மட்டுமே அங்கே இருந்தார்கள்.

**(தொடரும்)**



# அம்புலிமாமா செய்திகள்

## விரும்பி எழுதிய 'இம்போசிஷன்'!

பாடங்களில் தவறு செய்தால் மாணவர்களை 'இம்போசிஷன்' எழுதும்படி ஆசிரியர்கள் கட்டளை இடுவது வழக்கம். ஆனால் கோவையைச் சேர்ந்த எம். ராஜா ஷெரீப் என்பவர் தமக்குத் தாமே இம்போசிஷனை விதித்துக் கொண்டார். அவர் ஒரு உள்நாட்டு அஞ்சல் கடிதத்தில் ஆங்கிலத்தில் ராஜீவ் காந்தியின் பெயரை 8500 தடவைகள் எழுதினார். இது 93,500 ஆங்கில எழுத்துகளாயிற்று. இதனை ஒரு நாளுக்கு இரண்டு மணி வீதம் எழுதி ஒரு வாரத்தில் முடித்தார். இதனை ராஜீவ் காந்தியின் பிறந்த தேதியான ஆகஸ்ட் 20ந் தேதி திருமதி சோனியா காந்திக்குக் கிடைக்கும்படி அனுப்பினார். திருமதி சோனியா காந்தியும் அதனைப் பெற்றுக் கொண்டு ராஜீவ் காந்தி புகைப்படம் ஒன்றில் தம் கையெழுத்திட்டு அந்த இளைஞருக்கு அனுப்பியுள்ளார்.

## தொடர்ந்து ஆடிய நடனம்!

வித்யா சந்திரசேகர் என்ற இருபத்தே[illegible] வயதான பரத நாட்டியக் கலைஞர் சற்று[illegible] ஓய்வு எடுக்காமல் தொடர்ந்து 72 மண[illegible] நேரம் பரத நாட்டியம் ஆடி ஒரு சாதனை[illegible] புரிந்துள்ளார். இதய நோயால் மரணமுற்[illegible] தம் தந்தையின் நினைவாக இதனைச் செய்[illegible] காட்டினார் இவர். மக்களிடையே இத[illegible] நோய் பற்றிய விழிப்புணர்ச்சியை ஏற்படு[illegible]துவதே இவரது நோக்கம். அமெரிக்காவி[illegible] மிச்சிகன் மாநிலத்து ட்ராய் நகரில் 600 பே[illegible]களுக்கு முன் இந்த நாட்டியம் நடந்தது[illegible] அவர் இந்த நிகழ்ச்சியை முடித்த போ[illegible] அவரது கால்கள் கொப்பளித்திருந்தன[illegible] அவர் இதய நோய் பற்றி எச்சரிக்கையுட[illegible] இருக்குமாறு எல்லோரிடமும் கூறினா[illegible] அவர் ஏழாண்டுகளுக்கு முன் 48 மணி நேர[illegible] தொடர்ந்து நாட்டியமாடி அப்போது வசூலா[illegible] 10,000 டாலரை அமெரிக்கப் புற்று நோய் கழகத்திடம் கொடுத்தார்.

## நாணயங்களில் கடவுள் உருவம்!

ஒரு நாட்டின் நாணயங்களில் அந்நாட்டுத் தலைவர்களின் அல்லது பிரமுகர்களின் உருவங்களைப் பொறித்து வெளியிடுவது வழக்கம். நம் நாட்டிலும் ஜவாஹர்லால் நேரு, இந்திராகாந்தி ராஜீவ் காந்தி, அம்பேத்கார், மகாத்மா காந்தி ஆகியோரின் உருவங்களைக் கொண்ட நாணயங்கள் வெளியிடப்பட்டுள்ளன. ஆஸ்திரேலியாவில் இதுவரை இரண்டாவது எலிஜபெத் ராணியின் உருவத்தை நாணயங்களில் பதித்து வெளியீட்டு வந்தார்கள். இப்போது அங்கு நாணயங்களில் விநாயகர், சிவன், பார்வதி போன்ற ஹிந்துக் கடவுள்களின் உருவங்களைப் பதித்து வெளியிடுகிறார்கள். இவை பெர்த்திலுள்ள நாணய சாலையில் தயாராகி வெளி வருகின்றன. மும்பயியின் விநாயகர் ஆலயத்திற்கு 20,000 தங்க நாணயங்கள் சித்தி விநாயகரின் உருவம் பதிக்கப்பட்டு அளிக்கப்பட்டுள்ளது.

## லண்டனில் ஹிந்துக்கள் கோவில்

லண்டனின் ஒரு பகுதியில் முதன் முதலாக 70 அடி உயர கோபுரத்தோடு 27195 ச. அடிப் பரப்பில் ஒரு மகா விஷ்ணு ஆலயம் கட்டப்பட்டு வருகிறது. இதில் 26300 சிற்பச் சிலைகள் இடம் பெறும். இந்த ஆலயம் கட்ட சுண்ணாம்பு, கல், சலவைக் கல் கருங்கல் முதலியன பல்கேரியா, இத்தாலி, இந்தியா ஆகிய நாடுகளிலிருந்து தருவிக்கப்பட்டு. அவற்றை குஜராத்தின் காண்ட்லா துறைமுகத்திற்கு அனுப்பினார்கள். ராஜஸ்தானைச் சேர்ந்த 1500 சிற்பிகள் இவற்றால் அழகிய சிலைகளையும் தூண்களையும் உருவாக்கியதோடு சுவரிலும் தரையிலும் பதிக்கக் கற்களைப் பளபளப்பாக்கி அவற்றை லண்டனுக்குக் கப்பலில் அனுப்பியுள்ளார்கள்.




# சக்திக்குத் தக்கதா?

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீதேறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் கீழே இறங்கி அவன் அதைச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள்ளிருந்த வேதாளம் எள்ளி நகைத்து ''மன்னனே! நீ இந்த பயங்கர நிசியில் ஏன் இப்படிச் சிரமப் படுகிறாய்? நீ ஒரு சக்கரவர்த்தியாக ஆக வேண்டும் என ஆசைப்படுகிறாயா? உலகில் அமைச்சர் முதலமைச்சராகவும், போர் வீரன் படைத் தளபதியாகவும், ஏழை பணக்காரனாகவும், சாதாரண ஊழியன் உயர் அதிகாரியாகவும், ஆகிவிட விரும்புவது இயல்பே. ஆனால் ஒரு சிலர் இவ்வாறு உயர் பதவி பெற வாய்ப்பிருந்தும் அதனைக் கை நழுவ விட்டு விடுகிறார்கள். இது அவர்கள் வெறுப்பினால் விட்டு விடுகிறார்களோ என்னவோ? இதற்கு உதாரணமாக சேஷ

## வேதாளம் சொல்லும் கதை



கோபாலன் என்பவனின் கதையைக் கூறுகிறேன். கவனமாகக் கேள்'' என்று சொல்லிக் கதையை ஆரம்பித்தது.

கிருஷ்ணாபுரம் என்ற ஊரில் சேஷ் கோபாலன் என்ற இளைஞன் இருந்தான். அவன் குருகுல வாசம் செய்து படிப்பை முடித்துக் கொண்டு தன் ஊருக்கு வந்தான். அவன் தந்தைக்கு அவன் ஒரே மகன். படிப்பை முடித்த தன் மகன் தன் வயல் வேலைகளுக்குத் துணையாக இருப்பான் என்று அவனது தந்தை நாராயணன் நினைத்தான்.

ஆனால் சேஷகோபாலனோ ஒரு வேலையும் செய்யாமல் எப்போதும் தன் வீட்டின் எதிரேயுள்ள மரத்தடியே உட்கார்ந்து எதையோ யோசித்துக் கொண்டு இருக்கலானான். இதைக் கண்ட அவனது தந்தை நாராயணன் ஒருநாள் தன் மகனிடம் ''நீ இப்படி வேலை செய்யாமல் வீண் பொழுது போக்குகிறாயே. என் வேலைகளில் உதவியாக இருக்கக்கூடாதா?'' என்று கேட்டான்.

அதைக் கேட்ட சேஷகோபாலன் ''அப்படி விவசாயத்தில் எவ்வளவு பாடுபட்டாலும் நிறையப் பணம் கிடைக்காது. எனக்கு ஒரு மாத அவகாசம் கொடு, நான் அருகிலுள்ள பச்சை மலைக்குப் போய் அங்குள்ள சித்த யோகிகளைக் கண்டு அவர்களின் ஆசிகளைப் பெற்று வருகிறேன். பிறகு பாரேன் நம் வீட்டில் எங்கு பார்த்தாலும் பணக் குவியல்தான் இருக்கும்'' என்றான்.

குருகுலத்தில் தன் மகனை அனுப்பிப் படிக்க வைத்தது தான் செய்த பெரிய தவறு என்று நாராயணன் நினைக்கலானான். அவன் போக்கிலேயே விட்டு விடத் தீர்மானித்தான். அவனது மனைவியோ இதென்ன விபரீதம் எனக் கலங்கினாள்.

மறுநாள் சேஷகோபாலன் உணவு மூட்டையை எடுத்துக் கொண்டு பச்சை மலைக்குக் கிளம்பிவிட்டான். உச்சி வேளையின் போது அவன் காட்டில் ஒரு குளக்கரையை அடைந்தான். அப்போது அவன் தன் சாப்பாட்டு மூட்டையைக் கீழே வைத்து விட்டுச் சுற்றிலும் பார்த்தான். அச்சமயம் ஒரு மரத்தின் மீதிருந்து ஒரு குரங்கு கீழே குதித்தது. அது தன் கையிலிருந்த புல்லாங்குழலைக் கீழே போட்டு விட்டு அவன் கொண்டு வந்த சாப்பாட்டு மூட்டையைத் தூக்கிக் கொண்டு ஓடிப் போயிற்று.

குரங்கைத் துரத்த முடியாது என்று கண்டு அது எறிந்து விட்டுப் போன புல்லாங்குழலை எடுத்துப் பார்த்தான். வெள்ளிப் பூண் போட்டு அது பார்க்க அழகாக இருந்தது. உணவோ போய் விட்டது. என்ன செய்வது? குளத்தில் இறங்கித் தண்ணீரைக் குடித்து வயிறை அவன் நிரப்பிக் கொண்டான்.

அவன் புல்லாங்குழலைக் கையில் எடுத்துக் கொண்டு கொஞ்ச தூரம் சென்றான். அப்போது ஒரு முனிவர் அவன் எதிரே வந்தார். அவரது ஒளி மயமான தோற்றம் சேஷகோபாலனை மெய் சிலிர்க்க வைத்தது. அவன் அவரது கால்களில் விழுந்து வணங்கி எழுந்து நின்றான்.

அவரும் அவனைத் தொட்டு ''மகனே! எல்லாம் எனக்குத் தெரியும். நீ எதுவும் சொல்ல வேண்டாம். இப்பகுதியிலுள்ள முனிவர்களை தரிசித்து அவர்களது ஆசிகளைப் பெற்று உன் விருப்பங்களை நிறைவேற்றிக் கொள்ள நினைக்கிறாய். நீ கையில் வைத்திருக்கும் புல்லாங்குழல் சாதாரணப் பட்டதல்ல. அது சக்தி வாய்ந்தது. அதை வாசிப்பவரைத் தவிர அதன் இசையைக் கேட்பவர்கள் உடனேயே மெய் மறந்து தூங்கி விடுவார்கள். மனிதர்கள் மட்டுமல்ல, பறவைகள், மிருகங்கள், ராட்சஸர்கள் என்று எல்லா உயிரினங்களுமே தூங்கி விடும். இன்னொரு விஷயத்தை நினைவில் கொள். மனிதனின் ஆசைக்கு எல்லையே இராது. இந்த ஆசைகள் அவனது சக்திக்கு மீறியதாக இருக்கக்கூடாது. சக்திக்கு மீறி ஆசைப் பட்டால் ஏளனத்திற்கும் அவமானத்திற்கும் நீ ஆளாவாய். இது உனக்கு



என் எச்சரிக்கையாக இருக்கட்டும்'' எனக் கூறி விட்டுத் தன் வழியே சென்றார்.

சேஷகோபாலன் முனிவர் சொன்னதை நன்கு நினைவில் கொண்டான். அவன் உடனே தன் ஊருக்குத் திரும்பி வரலானான். அவன் கொஞ்ச தூரம் சென்றதும் ஒரு சிங்கம் கர்ஜித்துக் கொண்டு ஒரு மானைத் துரத்துவதைக் கண்டான். அவன் பயந்து போய் ஒரு மரத்தின் மீது ஏறிக் கொண்டான். அப்போது அவனுக்குத் தன்னிடமிருந்த புல்லாங்குழலின் நினைவு வரவே அதை எடுத்து ஊதினான். குழலிலிருந்து ஒலி கிளம்பியதும் சிங்கமும் மானும் தரையில் படுத்துத் தூங்கின.

அவன் சற்று நேரம் வரை அக் குழலை ஊதி இசையை அளிக்க, அந்த



இரு மிருகங்களும் படுத்தே கிடந்தன. அவன் குழல் இசைப்பதை நிறுத்திய தும் அந்த இரு மிருகங்களும் எழுந்து முன் போல ஓடலாயின. அதைப் பார்த்து விட்டு சேஷகோபாலன் தன் பார்வையைத் திருப்பிய போது தன் எதிரே ஒரு ராட்சஸி குதித்து நின்ற தைக் கண்டான்.

ராட்சஸி ''அடே! நீ மயக்கமுற்று உடனே கீழே விழ வேண்டும். எனக்கு ஒரே பசி. நான் உன்னை விழுங்க வேண்டும்'' என்றாள். அதைக் கேட்டு வியப்படைந்த சேஷகோபாலன் அதில் ஏதோ ரகசியம் இருப்பதை உணர்ந்து அவளிடம் ''நான் மயக்க முற்று விழாவிட்டால் உன்னால் என்னை விழுங்க முடியாதா?'' என்று கேட்டான்.

ராட்சஸி பெரு மூச்சு விட்டவாறே ''இது எனக்கு ஒரு முனிவர் கொடுத்த சாபம். நான் செய்த அபசாரத்தால் கோபம் கொண்டு நான் நினைவிழந்து கிடக்கும் உயிரினத்தைத்தான் சாப்பிட முடியும் என்று சபித்து விட்டார்'' என் றாள். உடனே சேஷகோபாலன் தன் னிடமிருந்த புல்லாங்குழலை எடுத்த போது ராட்சஸி அதை சட்டெனப் பிடுங்கி கொண்டாள். அதை நன்கு பார்த்து விட்டு ''ஓ! இதற்கு வெள்ளிப் பூண் பிடித்திருக்கிறதே'' என்று கூறி ஊதலானாள். சேஷகோபாலன் சட் டெனத் தன் காதுகளை இறுகப் பொத் திக் கொண்டான்.

இதைக் கண்ட ராட்சஸி ''ஓ! நான் குழல் ஊதினால் உன்னால் ரசிக்க முடியவில்லையா? எங்கே நீ ஊது பார்க்கலாம்'' என்று கூறிக் குழலை அவனிடம் கொடுத்தாள். சேஷ கோபாலனும் சட்டென அக்குழலை வாங்கிக் கொண்டு ஊதினான். அந்த ஒலியைக் கேட்டதுமே ராட்சஸி தரை மீது விழுந்து தூங்கினாள். உடனே அவன் அங்கிருந்து ஓடினான். குழ லோசை நின்றதும் விழுந்து எழுந்த ராட்சஸி ''ஓடாதே. நில்'' என்று கூறிய வாறே அவனைத் துரத்தினாள்.

அப்போது ஒரு அழகிய பல்லக் கைச் சிலர் சுமந்து கொண்டு வருவதை அவன் கண்டான். அவர்களைக் கண்ட ராட்சஸி ''ஆகா! இன்று எனக்கு நல்ல வேட்டைதான் கிடைத்தது'' என்று எண்ணி மகிழ்ந்தாள். அவள் பலமாகச் சிரிக்கவே பல்லக்கினுள்ளிருந்த ஒரு அழகிய பெண் திரையை விலக்கி வெளியே பார்த்தாள். அவளைக் கண்ட சேஷகோபாலன் ''மணம் செய்து கொள்வதானால் நான் இந்த

அழகியைத்தான் மணந்து கொள்ள வேண்டும்'' என்று தன் மனதில் எண்ணினான்.

ராட்சஸி அப்பல்லக்கை நோக்கி நடந்து வரலானாள். பல்லக்குடன் வந்தவர்களும் பல்லக்கினுள் இருந்த பெண்ணும் பயந்து நடுங்கினார்கள். சேஷகோபாலன் ராட்சஸி வருவதைக் கவனமாகப் பார்த்துக் கொண்டிருந்தான். அவள் ஒரு பாழடைந்த கிணற்றின் பக்கம் வந்த போது அவன் தன் குழலை எடுத்து ஊதினான். ராட்சஸி கிணற்றில் விழுந்து தூங்கினாள். பல்லக்கோடு வந்தவர்களும் பல்லக்கினுள்ளிருந்த பெண்ணும் தூங்கினர்.

சேஷகோபாலன் குழல் ஊதுவதை நிறுத்தினான். எல்லோரும் கண் விழித்து எழுந்தனர். ஆனால் ராட்சஸி மட்டும் கிணற்றுச் சேற்றில் அழுந்தி அதிலிருந்து வெளியே வர முடியாமல் தவித்தாள். சேஷகோபாலன் பல்லக்கு இருந்த இடத்திற்குப் போய் அவர்களிடம் நடந்ததைக் கூறி ''இனி ராட்சஸியின் பயம் இல்லை. அவள் கிணற்றுச் சேற்றில் அழுந்திக் கிடக்கிறாள்'' என்றான்.

அப்போது பல்லக்கு தூக்கிகளில் ஒருவன் ''நாங்கள் சோமகிரி நாட்டவர். பல்லக்கில் எங்கள் இளவரசி இருக்கிறார். எங்கள் நாட்டின் மீது இந்திரபுரி மன்னன் படை எடுத்து வரவே எம் மன்னர் எங்களை அரண்மனையிலிருந்து சுரங்கப் பாதை வழியாக வெளியே அனுப்பி விட்டார். இப்போது இந்திரபுரிப் படைகள் எம் அரசரின் கோட்டையை முற்றுகை இட்டுக் கொண்டிருக்கின்றன'' என்றான்.



சேஷகோபாலனும் ''நாம் இப்போதே போய் உங்கள் மன்னரைக் காணலாம். இந்திரபுரி மன்னனைத் தோற்கடிக்க நான் அவரிடம் வழி கூறுகிறேன்'' என்றான். யாவரும் சேஷகோபாலனுடன் வந்த வழியிலேயே திரும்பிச் சென்று சுரங்கப் பாதை வழியாக அரசனின் அறையை அடைந்தார்கள்.

மன்னன் தன் மகளைக் கண்டு ஆச்சரியப்பட்டு ''நீ சுரங்கப் பாதை வழியாகப் போனாயே. இன்னும் போர் முடியவில்லையே நீ ஏன் திரும்பி வந்தாய்?'' என்று கேட்டான். அவளும் தன் தந்தையிடம் சேஷகோபாலனையும் அவன் செய்த அதிசயச் செயலையும் கூறி ''அப்பா! அவர் இந்திரபுரி மன்னனைத் தோற்கடிக்கத் தங்களுக்கு ஒரு வழி சொல்ல வந்திருக்கிறார்''



என்னையும் என் குடும்பத்தவரையும் காத்ததோடு இந்த நாட்டையும் காத்தாய் என்று ஆகிறது. எனவே நீ எதைக் கேட்டாலும் நான் உனக்குக் கொடுப்பதாக வாக்களிக்கிறேன்'' என்றான்.

மறுநாள் போருக்கு எல்லா ஏற்பாடுகளையும் சேஷகோபாலன் செய்தான் சோமகிரி வீரர்கள் எல்லோரும் தம் காதுகளில் பஞ்சை அடைத்துக் கொண்டார்கள் சேஷகோபாலன் ஒரு ரதத்தில் ஏறி உட்கார்ந்தான். அவன் கையில் புல்லாங்குழல் இருந்தது. எல்லோரும் போர்களத்தை அடைந்தார்கள்.

சேஷகோபாலன் புல்லாங்குழலை ஊதலானான். அந்த ஒலியைக் கேட்டதுமே எதிரியின் படை முழுவதும் தரையில் விழுந்து தூங்கியது. சேஷகோபாலன் குழல் ஊதிக் கொண்டே இருக்க இந்திரபுரிப் படை வீரர்கள் நன்கு தூங்கிக் கொண்டிருந்தார்கள். சோமகிரிப் படை வீரர்கள் இந்த வாய்ப்பைப் பயன்படுத்தி இந்திரபுரி வீரர்களையெல்லாம் வெட்டிக் கொன்றார்கள். சோமகிரி மன்னன் இந்திரபுரி மன்னனைச் சிறைப் பிடித்தான்.

அன்று மாலை சேஷகோபாலனை கௌரவிக்க சோமகிரி மன்னன் தர்பாரைக்கூட்டினான். தர்பாரின் அமைச்சர்கள், சேனாதிபதி, படைத் தலைவர்கள், கவிஞர்கள், பண்டிதர்கள், பிரபுக்கள், பிரமுகர்களென்று பலரும் கூடி இருந்தார்கள். அவர்கள் எல்லோருமே சேஷகோபாலனை மாபெரும் வீரனென்று பாராட்டிப் புகழ்ந்தார்கள். ஆனால் சேனாதிபதி மட்டும் எதுவும் கூறாமல் முகத்தை 'உம்'மென்று

என்று சொல்லி சேஷகோபாலனையும் தன் தந்தைக்கு அறிமுகம் செய்து வைத்தாள்.

மன்னன் சேஷகோபாலனிடம் ''நீ ஏதோ போரில் எதிரிகளை வெல்ல ஒரு புது வழி சொல்ல வந்திருக்கிறாயாமே. அது என்ன?'' என்று கேட்டான். அவனும் ''அரசே! நான் போரில் உங்களுக்கு வெற்றி கிடைக்கும் வழியைக் கூறுகிறேன். அதற்குப் பரிசாக எனக்கு நீங்கள் நான் கேட்பதைக் கொடுப்பதாக வாக்களிக்க வேண்டும்'' என்றான். அவன் மனதில் அரச குமாரியைத்தான் மணந்த கொள்ள வேண்டுமென்ற எண்ணம் தான் இருந்தது.

மன்னனும் ''சேஷகோபாலா நீ என் எதிரியை வெல்ல வழி சொல்லி நான் வெற்றி பெற்றால் அது நீ

வைத்துக் கொண்டிருந்தான் அதை கவனித்த சேஷகோபாலன் யோசனை யில் ஆழ்ந்தான்.

மன்னன் எழுந்து சபையோரிடம் தான் சேஷகோபாலனுக்குப் போருக்கு முன் கொடுத்த வாங்குறுதி யைக் கூறினான். பிறகு சேஷகோபா லனிடம் ''மாவீரரே! நீங்கள் என்ன கேட்டாலும் கொடுப்பதாக போருக்கு முன் வாக்களித்தேன். உங்கள் யோசனைப்படி நடந்து வெற்றியும் பெற்று விட்டேன். அதனால் இப் போது நீங்கள் என்ன விரும்புகிறீர்கள் என்று கூறுங்கள். நான் அதைக் கொடுக்கிறேன்'' என்றான்.

அப்போது யாவரும் அவன் என்ன கேட்கப் போகிறான் என்று ஆவலு டன் எதிர்பார்த்தார்கள். மன்னனும் தன்னையும் நாட்டையும் காத்த அந்த மாவீரனுக்கு எதையும் கொடுக்கத் தயாராக இருந்தான். நாட்டில் பாதி யைக்கூடக் கொடுக்க அவன் தயாராக இருந்தான். அவனுக்கு பொன்னோ, மணியோ, எதைக் கேட்டாலும் கொடுத்து விடலாம் என்று நினைத் தான்.

ஆனால் சேஷகோபாலன் சற்று நேரம் வரை எதுவும் பேசவில்லை. அதைக் கண்ட மன்னன் ''மாவீரனே! சற்றும் தயங்காதே. என்ன வேண்டு மானாலும் நீ தாராளமாகக் கேள். நான் கொடுக்கிறேன்'' என்று கூறி அவனது பதிலை எதிர்பார்த்தான்.

சேஷகோபாலனும் மன்னனை வணங்கி ''அரசே! இப்போது என்னை மன்னியுங்கள். நான் என்ன விரும்பு கிறேன் என்பதைத் நாளை தங்களிடம் தெரிவிக்கிறேன்'' என்றான்.

மறுநாள் விடியற்காலையில் சேஷ கோபாலன் எழுந்து தன் மந்திர சக்தி வாய்ந்த புல்லாங்குழலை ஒடித்து கோட்டை அகழிக்குள் எறிந்து விட்டு யாரிடமும் சொல்லிக் கொள்ளாமல் தன் ஊருக்குக் கிளம்பி போய் விட்



டான்.

வேதாளம் இக்கதையைக் கூறி ''மன்னனே! முதலில் அரசகுமாரியைப் பார்த்ததும் சேஷகோபாலன் அவளை மணக்கத்தானே விரும்பினான். அவன் மணந்தால் அந்தப் பெண்ணைத்தான் மணக்க வேண்டும் என்றும் தீர்மானித்துக் கொண்டானே. மன்னனிடம் அவன்தான் விரும்புவதை கொடுக்க வேண்டுமென்றும் வாக்குறுதி வாங்கியும் கொண்டானே. ஆனால் மன்னன் தர்பாரில் அவனது விருப்பம் என்ன என்று கேட்டபோது அதை மறுநாள் சொல்வதாகக் கூறி அவன் மறுநாள் தம் ஊருக்குக் கிளம்பிப் போய் விட்டானே. அது மட்டுமா? சக்தி வாய்ந்த புல்லாங்குழலையும் ஒடித்து எறிந்து விட்டானே. அவன் ஏன் அரச குமாரியை மணந்து கொள்ளாமல் ஊருக்குத் திரும்பிப் போனான்? ஏன் புல்லாங்குழலை ஒடித்துப் போட்டான்? இக்கேள்விகளுக்குச் சரியான பதில்கள் தெரிந்திருந்தும் நீ கூறாவிட்டால் உன் தலை வெடித்துச் சுக்கு நூறாகி விடும்'' என்றது.

விக்கிரமனும் ''சேஷகோபாலன் காட்டில் கண்ட முனிவரிடம் புதிய பாடம் கற்றான். அவர் புல்லாங்குழலைப் பற்றியும் ஒருவன் தன் சக்திக்கு மேல் ஆசைப்படக் கூடாது என்றதை அவன் தர்பாரில் இருந்த போது நினைத்துப் பார்த்தான். சாதாரணப் பட்ட தான் மாவீரனெனப் பெயர் பெறவும் அரசகுமாரியைக் கண்டு மன்னனுக்கு வெற்றி வாங்கித் தந்ததும் மந்திரசக்தி வாய்ந்த புல்லாங்குழலால்தான் என்பது அவன் நினைவிற்கு வந்தது. வெறும் மந்திர சக்தியால் மாவீரன் என்று பட்டம் பெறுவது சரியல்ல என்பதைச் சேனாதிபதி பார்த்த பார்வையிலிருந்து அவன் புரிந்து கொண்டான். அதனால் அரசகுமாரியை மணப்பதும் தன் சக்திக்கு மீறியது என அவன் எண்ணினான். அதனால்தான் அந்தக் குழலை ஒடித்து எறிந்து விட்டுத் தன் ஊருக்குப் போய் விட்டான்'' என்றான்.

விக்கிரமனின் சரியான இந்த பதிலால் அவனது மௌனம் கலையவே அவன் சுமந்து வந்த உடலோடு வேதாளம் உயரக் கிளம்பிப் போய் மீண்டும் முருங்க மரத்தில் ஏறிக் கொண்டது.



# மலபார் கடற்கரை

கருத்து: **மீராநாயர்** ◆ ஓவியர்: **கோப குமார்**




மலபார் கடற்கரைப் பயணத்தில் நாம் முதலில் வரலாற்றுப் புகழ் மிக்க பழமையான கொடுங்கலூரை அடைகிறோம். இது முன்பு முஜ்ரிஸ் என்று பெயர் பெற்றிருந்தது.

இத்துறைமுகம் பழங்காலத்தில் போனிக்ஸ், எகிப்து, அரேபியா, கிரீஸ், ரோம் ஆகிய நாடுகளுடன் வணிகத் தொடர்பு கொண்டு ஆடைகள், தாமிரம், பித்தளைப் பாத்திரங்கள், மது ஆகியவற்றை இறக்குமதி செய்தது. மிளகு, குரங்குகள், புலிகள், கிளிகள், யானைகள் முதலியவற்றை ஏற்றுமதி செய்தது.

இந்தக் கொடுங்கலூரில்தான் 2000 ஆண்டுகளுக்கு முன் முதன் முதலாக யூதர்கள் கரை இறங்கினார்கள். கி.பி. 52ல் வந்த செண்ட்தாமஸ் கேரளத்தில் கிருஷ்துவ மதத்தைப் பரப்ப வந்தார். முதலாவது மசூதி இங்கு கி.பி. 300ல் இஸ்லாமை தழுவிய கடைசி சேர மன்னனான சேரமான் பெருமாளால் கட்டப்பட்டது. இந்த மசூதி எளிய முறையில் மரத்தாலும் கல்லாலும் கட்டப்பட்டது. இதற்கு மற்ற மசூதிகளுக்குள்ளது போலக் குண்டு கோபுரம் இல்லை. மேலும் இது மேற்கு நோக்கி இராமல் கிழக்கு நோக்கி உள்ளது. கேரள ஆலயங்களில் உள்ளது போல ஒரு பெரிய விளக்கு இம்மசூதியில் உள்ளது.


முதலாவது மசூதி

கொடுங்கலூரிலுள்ள பத்திரகாளி கோவில் ஹிந்துக்களுக்குப் புனிதமானது. இந்தக் கோவிலிலுள்ள அம்மன் கேரளக் கடற்கரையைக் காப்பதாக மக்கள் கருதுகிறார்கள். கொடுங்கலூர் துறைமுகம் பெரியாற்றில் கி.பி. 1314ல் வந்த வெள்ளத்தால் மணலடித்துப் பயனற்றதாக ஆயிற்று. இவ்வாறு அது வணிகத்திற்குத் தகுதி பெறாது போகவே கொச்சித் துறைமுகம் வளர்ச்சியுற்றது.



உலகின் மிகச் சிறந்த துறைமுகங்களில் கொச்சி ஒன்று. அதை 'அரபிக் கடலின் அரசி' எனவும் கூறுகிறார்கள். இது எல்லாப் பருவகாலங்களுக்கும் ஏற்ற துறைமுகம். கொச்சி பல தீவுகளாலும் உள் நாட்டு ஒரு பகுதியாலும் ஆனது. வெல்லிங்டன் தீவு, போல்காடி தீவு வைபீரி தீவு என்று பல தீவுகளால் கொச்சி ஆனது வைபீரி தீவில் மீன் பிடிக்க சீனாவில் உபயோகிக்கிறார்கள். இந்த வலைகளை குப்லாய்கான் காலத்தில் வியாபாரிகள் பார்த்து அவை இயங்குவது போலச் சுழல வைத்து. அதன் மேல் ஒரு விளக்கை வைத்து மீன்களைக் கவர்ந்து வலைகளில் விழ வைத்தார்கள். இம்முறையில் மீன் பிடிக்க ஏழெட்டுப் பேர்கள் தேவைப்படுகிறார்கள்.

உள்நாட்டில் அமைந்துள்ள கொச்சிக் கோட்டை துறைமுகத்தின் பக்கத்தில் உள்ளது. இது ஐரோப்பியக் குடியிருப்புகளில் மிகப் பழமையானதாகக் கருதப்படுகிறது.

போர்த்துகீசியரால் கி.பி. 1510ல் கட்டப்பட்ட செண்ட் பிரான்சிஸ் சர்ச் நாட்டிலேயே மிகப் பழமையானது. கொச்சியில் கி.பி. 1524ல் இறந்து போன வாஸ்கோடி காமாவின் சடலம் இங்கு வைக்கப்பட்டு பிறகே கி.பி. 1538ல் போர்ச்சுகலுக்கு எடுதது்ச் செல்லப்பட்டது. அச்சடலம் வைக்கப்பட்ட இடம் பித்தளைக் கம்பிகள் கொண்டு சுற்றிலும் போடப் பட்ட அடைப்பாக உள்ளதை இன்றும் காணலாம்.



**செண்ட் பிரான்சிஸ் சர்ச்**

கொச்சிக்குத் தெற்கேயுள்ள மட்டஞ்சேரி கேரளாவில் யூதர்களின் உறைவிடம். இப்போது அவர்களது எண்ணிக்கை குறைந்துள்ளது ஏனெனில் பலர் இஸ்ரேலுக்குப் போய் விட்டார்கள். இந்த யூதர்களின் குடியிருப்பு கி.பி. நான்காம் நூற்றாண்டில் அமைக்கப்பட்டது. பர்தேசி தொழுகை இடம் எனப்படும் யூதர்களின் தொழுகையிடம் 430 ஆண்டுகளுக்கு முன் கட்டப்பட்டது. இங்கு 18ம் நூற்றாண்டில் கட்டப்பட்ட மணிக் கூண்டு ஒன்றும் உள்ளது.

இந்தத் தொழுகை இடத்திற்குப் பக்கத்தில் இரண்டடுக்கு மட்டஞ்சேரி அரண்மனை உள்ளது. இதன் உட்புறத்தில் இராமாயண, மகாபாரதக் காட்சிகள் சித்தரிக்கப்பட்டுள்ளன. கொச்சி மன்னர்கள் பயன்படுத்திய பல்லக்குகளையும் ஆடைகளையும் கொண்ட அருங் காட்சியகமாக இன்று இது விளங்கு கிறது.

இந்த அரண்மனையை 'டச்சு அரண்மனை' என அழைக்கிறார்கள். ஆனால் இது டச்சுக் காரர்களால் கட்டப்படவில்லை. இதை போர்த் துக்கீசியர் கொச்சி மன்னரின் அரண் மனையை அழித்ததற்காகப் புதிதாகக் கட்டிக் கொடுத்தார்கள். அதற்குப் பின் டச்சுக்காரர் கள் இதன் கூரைப் பகுதியைத் தங்கள் பாணியில் புதுப்பித்தார்கள்.



**மட்டஞ்சேரியில் ஒரு படகோட்டி**

இந்த அரண்மனையின் தரையைப் பார்த்தால் கருநிற சலவைக் கல் பதிக்கப்பட்டது போலத் தோன்றும். ஆனால் அது எரிக்கப்பட்ட கொட்டாங்குச்சி, கரி, சுண்ணாம்பு, பச்சிலைச்சாறு, முட்டை வெள்ளை ஆகியவற்றின் கலவை கொண்டு பூசப்பட்டது. இம்மாதிரி தரை பூசப்படுவது கேரளத்தில் நெடுங்காலம் வரை வழக்கில் இருந்து தற்போது மறைந்து கொண்டு வருகிறது.

கொச்சியிலிருந்து கொல்லம் வரை கடலின் உப்பங் கழிகளைக் காணலாம். கொச்சியிலிருந்து ஆலப்புழா வரையிலுள்ள கடலேரிதான் மிகப் பெரிது. இதன் பரப்பளவு 79 சதுர மைல். இதன் பெயர் வெம்பநாடு ஏரி.

ஆகஸ்ட் செப்டம்பர் மாதங்களில் ஆலப்புழாவின் கரையில் மக்கள் பெருந்திரளாய்க் கூடி இங்கு நடக்கும் சந்தன வள்ளம் என்ற படகுப் போட்டியைக் கண்டு மகிழ்கிறார்கள். 130 அடி நீளத்தில் பாம்பு வடிவில் அமைக்கப்பட்ட பல 'வள்ளங்கள்' (படகுகள்) ஒவ்வொன்றிலும் 100 பேர்கள் இருந்து துடுப்பு வலித்து படகுகளை வேகமாக ஓட்டிப் போட்டி போடுகிறார்கள். பண்டித நேரு இந்த மாநிலத்திற்கு விஜயம் செய்ததின் நினைவாக ஒவ்வொரு சுதந்திர தினத்தன்றும் நேரு படகுப் போட்டி நடக்கிறது. நேரு வந்த போது குட்ட நாட்டின் மக்கள் அவரை ஆலப்புழாவில் ஒரு படகுப் போட்டியின் போது ஒரு படகில் ஏற்றிச் செலுத்தி அவரை மகிழ்வித்தார்கள். நேரு அப்போட்டியைக் கண்டு வியந்தும் மகிழ்ந்தும் டில்லி திரும்பியதும் ஆண்டு தோறும் நடக்கும் படகுப் போட்டியில் வெற்றி பெறும் படகிற்கு ஒரு கேடயம் கொடுக்க ஏற்பாடு செய்து அதைக் கேரள முதலமைச்சருக்கு அறிவித்தார்.





# கவிஞரின் கற்பனை வளம்

நாகையூர் கடற்கரைப் பகுதியில் ஒரு ஜமீனிலுள்ள சிறிய ஊர். அப்பகுதி சில சமயங்களில் புயலாலும் மழையாலும் தாக்கப்பட்டு பலத்த சேதத்திற்கு உள்ளாகி வந்தது. ஒரு முறை வீசிய பயங்கரப் புயலில் நாகையூர்வாசிகள். தம் வயல்களிலிருந்து பயிர்களையும் மரங்களையும் இழந்தது மட்டுமல்லாமல் தம் வீடு வாசல்களையும் இழந்து பரிதவிக்கலானார்கள்.

அவர்களது ஜமீன்தாரர் இரக்க சுபாவமுள்ளவர். தம் மக்கள் கஷ்டப்படுகிறார்களென்றால் அவர் பண்டங்களைக் கொடுத்துப் பண உதவியும் செய்பவர், அம்முறையும் இயற்கையின் சீற்றத்தால் மக்கள் பட்ட அவதியைக்கண்டு அவர் தாராளமாக எல்லா விதத்திலும் அவர்களுக்கு உதவினார்.

அப்போது ஆஸ்தான சோதிடர் அவரிடம் ''பிரபுவே! இயற்கையின் சீற்றத்தை தம்மால் தடுக்க முடியாது தான். இயற்கை என்பது நிலம், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம் எனப் பஞ்ச பூதங்களைக் கொண்டதுதான். இவற்றில் காற்றான வாயுவின் புத்திரர் அனுமார். அவரை வழிபட்டால் அவர் இத்தகைய இயற்கையின் சீற்றங்களிலிருந்து நம்மைக் காப்பாற்றுவார். எனவே அவரது விக்கிரகம் ஒன்றை நிறுவ வேண்டும்'' என்று கூறினார்.

ஜமீன்தாரரும் அது நல்ல யோசனையே என்று ஏற்றுக் கொண்டு ஒரு அழகிய நந்தவனத்தை அமைத்து அதில் அனுமாரின் விக்கிரகத்தை நிறுவ ஏற்பாடுகளைச் செய்யச்சொன்னார். அந்த நந்தவனத்தில் பல பூச்செடிகளும் பழ மரங்களும் வளர்க்கப்பட்டன. அது மிக அழகாக அமைந்தும் விட்டது.

அதில் அனுமாரின் விக்கிரகத்தைப் பிரதிஷ்டை செய்ய ஒரு நல்ல நாளும்

—சங்கர சுவாமிநாதன்—



குறிக்கப்பட்டது. அந்த நாளில் பெருந்திரளாக அந்த நந்தவனத்திற்குள் வந்து சேர்ந்தார்கள். அந்த அழகிய நந்தவனத்தில் முறைப்படி அனுமார் விக்கிரகமும் நிறுவப்பட்டது.

இச்சமயத்தில் பல சொற்பொழிவுகள் நிகழ்ந்தன. கவிஞர்கள் தம் கவிதைகளைக் கூறினார்கள். பாமர மக்கள் பஜனையில் ஈடுபட்டார்கள். இவை யாவும் அனுமாரைப் பற்றியேதான் இருந்தன. அந்த உற்சவ நிகழ்ச்சி நிரலில் இராமாயணத்தின் சுந்தர காண்டப் பாராயணமும் சேர்க்கப்பட்டிருந்தது.

அதைக் கண்ட ஒருவர் ஆத்திரத்தோடு ''நடக்க வேண்டியது நடந்தே தீரும். எனவே அதை யாராலும் தடுக்க முடியாது. இராமயணத்தின் சுந்தர காண்டத்தைப் பாராயணம் செய்வதால் அனுமார் தோன்றி நன்மை புரிவார் என்பதெல்லாம் நம்பத் தக்கதல்ல. நான் சுந்தரகாண்டத்தை எளிய நடையில் கவிதை வடிவில் நம் தாய் மொழியில் எழுதி வைத்திருந்தேன். ஆனால் அதை அண்மையில் அடித்த புயல் வெள்ளத்தில் அடித்துக் கொண்டு போய் விட்டது. அப்போது ஒன்றும் அனுமார் மேலே இருந்து குதித்து வந்து காப்பாற்றி விடவில்லை'' என்றார்.

அதைக் கேட்ட பலர் ஆத்திரம் கொண்டார்கள். ''இவன் யாரோ நாத்திகன். கடவுளை நம்பாதவன். இவனை இப்படியே பேச விடக் கூடாது'' என்று பலர் கூச்சல் போட்டனர். சிலர் அவனை அடிக்கவும் முயன்றனர். ஆனால் ஜமீன்தாரரின் கட்டளையின் பேரில் அவரது ஆட்கள் அவர்களைத் தடுத்தனர்.

ஜமீன்தாரர் அவரைத் தம்மருகே அழைத்து 'இயற்கையின் சீற்றத்தை யாராலும் தடுக்க முடியாதுதான். நீங்கள் பக்தி சிரத்தையுடன் அதை எழுதி இருந்தால் ஒருவேளை அது வெள்ளத்தில் அடித்துச் செல்லாமல் இருந்திருக்கும். பரவாயில்லை. நீங்கள் மீண்டும் சுந்தரகாண்டத்தை எழுத எல்லா வசதிகளையும் செய்து கொடுக்கிறேன்'' என்றார்.

இதைக் கேட்டு அவர் வெட்கமடைந்து ''பிரபுவே. எல்லோரும் சுந்தர காண்டத்தைப் பாராயணம் செய்தால் நன்மை ஏற்படும் என்று

கூறியதால் அந்த நம்பிக்கையில் சுந்தர காண்டத்தைப் படித்து விட்டு எளிய நடையில் எழுதி வைத்தேன். ஆனால் அதை வெள்ளம் அடித்துக் கொண்டு போய் விட்டதே என்ற ஆத்திரத்தில் ஏதேதோ கூறி விட்டேன். பஞ்சபூதங் களில் நான்காவதற்குப் பிறந்த திரு உருவம் ஐந்தாவதற்கும் இரண்டாவ தற்கும் இடையில் வெகு தூரம் போய் முதலாவதற்குப் பிறந்ததற்கு தைரிய மூட்டி மூன்றாவதுடன் நட்பு கொண்டு ஒரு கலக்கு கலக்கி விட்டு மறுபடியும் ஐந்தாவதற்கும் இரண்டா வதற்கும் இடையில் சென்று முதலாவ தற்கும் பிறந்ததற்கு மகிழ்ச்சியை அளித்தது. இந்த நந்தவனம் அதனால் சிறப்படையட்டும்'' என்றார்.

ஜமீன்தாரரும் மற்றவர்களும் அக் கவிஞர் கூறியது புரியாமல் திகைத் தனர். அப்போது ஆஸ்தான கவிஞர் எழுந்து ''பிரபுவே! இக்கவிஞரின் திற மைதான் என்ன! பஞ்ச பூதங்களைக் கொண்டு அனுமாரைப் புகழ்ந்து சுருக்கமாய் கூறி விட்டாரே. பஞ்ச பூதங்களில் நான்காவதான வாயுவுக் குப் பிறந்த அனுமார் ஐந்தாவதும் இரண்டாவதுமான ஆகாயத்திற்கும் சமுத்திரத்திற்கும் நடுவே சென்று முதலாவதான பூமாதேவியின் புதல்வி யான சீதாதேவியைக் கண்டு தைரியம் கொடுத்து, மூன்றாவதான நெருப் பால் இலங்கையை எரித்து விட்டுப் பிறகு மறுபடியும் ஐந்தாவதும் இரண் டாவதுமான ஆகாயத்திற்கும் சமுத் திரத்திற்கும் இடையே புகுந்து வந்து முதலாவதற்குப் பிறந்த பூதேவியின் புதல்வி சீதாதேவிக்கு மகிழ்ச்சியை அளித்தார் என எவ்வளவு சாதுரிய மாகக் கூறியுள்ளார்'' என்று விளக் கினார்.

ஜமீன்தாரரும் ''அடேயப்பா! இவர் கூறியதில் இவ்வளவு கருத்தா புதைந்திருக்கிறது! எங்களுக்கு இதெல்லாம் புரியவில்லையே. நீங் கள் எடுத்துக் கூறிய பிறகுதான் தெரிந் தது. உண்மையிலேயே இவர் மகாப் பண்டிதர்தான்'' என்று கூறி அக்கவிஞ ரைப் பாராட்டிப் பரிசளித்தார். மக் களும் அவரை மிகவும் பாராட்டிப் புகழ்ந்தார்கள்.



# உதவியா அது?

குருகுல முறையில் நடத்தப்படும் அப்பள்ளியில் பல ஊர்களிலிருந்து மாணவர்கள் வந்து அங்கு படித்து வந்தார்கள். ஒருநாள் அந்த குருகுலத்தின் ஆசிரியர் தம் மாணவர்களுக்கு பிறருக்கு உதவுவது பற்றி விளக்கி ''சில சமயங்களில் வயதானவர்கள் பாதையைக் கடக்க முடியாமல் ஒரு ஓரத்தில் நின்று தவித்துக் கொண்டிருப்பார்கள். அவர்களுக்குப் பாதையைக் கடக்க உதவி மறுபுறம் கொண்டு சேர்ப்பது பெரும் புண்ணியமாகும் என்றார்.

அதற்கு அடுத்தநாள் நான்கு மாணவர்கள் குருகுலத்திற்கு நேரம் கழித்து வந்தார்கள். அவர்களிடம் ஆசிரியர் அவர்கள் தாமதமாக வந்ததற்கு என்ன காரணம் என்று கேட்டார். அதற்கு அவர்கள் தாம் ஒரு வயதானவரை பாதையின் ஒரு புறத்திலிருந்து மறுபுறம் கொண்டு போய் விட்டதாகக் கூறினார்கள்.

அது கேட்டு ஆசிரியர் ''இதற்கு ஒருவர் போதுமே.'' எனவே அவர்கள் ''அந்த முதியவர் பாதையோரமாக நின்று கொண்டிருந்தார். நாங்கள் பாதையின் மறுபுறத்தில் கொண்டு போய் விடுவதாகக் கூறினோம். அவரோ தாம் மறுபக்கம் போக விரும்பவில்லை என்று கூறினார். நாங்களா விடுவோம்? கிடைக்கப்போகும் புண்ணியத்தை நழுவி விடுவோமா? அவரை நாங்கள் நால்வருமாகச் சேர்ந்து வலுக்கட்டாயமாகத் தூக்கிக் கொண்டு போய் பாதையின் மறுபுறத்தில் இறக்கினோம். இது பரோபகாரம்தானே'' என்றார்கள்.

ஆசிரியர் அடபாவமே என்று தன் தலையில் அடித்துக் கொண்டார்.





# அம்புலிமாமா

# பொன்மயமான பொழுதுகள் - 5

## பெரிய வேட்டை





கற்கால மனிதன் 'க்ரூ' தன் கல் ஆயுதத்தை எறிந் தான்.












இக்கதையின் சம்பவத்தில் மிகப் பெரிய தவறு என்ன?



# பொன்மயமான பொழுதுகள் வினாக்கள்



**1** ஸ்காட்லாந்தின் ஒரு ஏரியில் வாழும் இந்த ராட்சஸ உயிரினத்தைப் பிடிக்கப் பல நூற்றாண்டுகளாக முயன்று வருகிறார்கள். இதன் பெயர் என்ன?

**2** திபத் மலைப்பகுதியிலும் இமய மலை மீதும் பாதி மனிதனும் பாதி மிருகமாயும் உள்ள ஒரு உயிரினத்தின் காலடிச் சுவடு இது. அந்த உயிரினம் எது?





**3** பல வருடங்களாக பல கப்பல்களும் ஆகாய விமானங்களும் அட்லாண்டிக்மாக் கடலின் இப்பகுதிக்குப் போனதும் மாயமாய் மறைந்து போனதால் இப்போது விமானங்களும் கப்பல்களும் அப்பகுதிக்குச் செல்வதில்லை. அப்பகுதியின் பெயர் என்ன?

**4** ஒரு பறவையின் எலும்புக் கூடு ஏன் மிக லேசாக இருக்கிறது?



**5** மனிதனின் கழுத்தில் ஏழு எலும்புகள் உள்ளன. ஒட்டைச் சிவிங்கியின் கழுத்தில் எவ்வளவு எலும்புகள் உள்ளன?



**6** எட்கார்வாலஸ் எழுதிய நாவலின் அடிப் படையில் 1933ல் தயாரிக்கப்பட்ட ஒரு திரைப்படத்தில் நியூயார்க் தெருக்களில் வெறி பிடித்த மாபெரும் மனிதக் குரங்கு ஓடுவதாகக் காட டப்பட்டது. அந்தத் திரைப்படத்தின் பெயர் என்ன?



**7** மிகப் பெரிய முட்டை யிடும் பறவை எது?





**8** சுராமீன்கள் நில்லாமல் போய்க் கொண்டே இருக் கின்றன. அவை எப்போது நகராமல் இருக்கும்?

# டினாசோர் கட் அவுட் செய்யுங்கள்

இந்த டினாகோர் கட் அவுட் உருவத்தை ஒரு கெட்டியான அட்டையில் பெரிதாக வரையுங்கள். புள்ளிகளையும் கோடுகளையும் கவனித்துச் சரியாகக் குறியிடுங்கள். இதை வெட்டி எடுத்து வண்ணம் கொடுங்கள். இது இப்போது மடிக்க ஏற்றதாக உள்ளது. மடிக்கு முன் கத்திரிக் கோலின் முனையால் கோடிட்ட வரியில் அழுத்திப் பள்ளக் கோட்டை வரையவும்.

கோடுள்ள இடத்தில் (....) மடிக்கவும். இப்படிக் கீழ் நோக்கி மடித்தபின்னும் புள்ளிகள் தெரியும்படி இருக்க வேண்டும்.

கோடிட்ட இடத்தில் (....) மேல் நோக்கி மடிககவும். இவ்விதம் மடிக்கும் போது கோடுகள் தெரியக் கூடாது. வால்பகுதியின் இரு பகுதிகளையும் ஒட்டுங்கள் சிவப்பு நிறத்தில் காட்டப்பட்ட பகுதிகளை படத்தில் காட்டிய படி ஒட்ட வேண்டும்.






மைத்திரேயர் சென்ற பின் திருத ராஷ்டிரன் விதுரனிடம் கிம்மீரனின் வதம் பற்றி கேட்ட விதுர னும் அதைக் கூறலானான்.

வனவாசம் செய்யச் சென்ற பாண்ட வர்கள் மூன்று நாட்களுக்குப் பின் இர வில் கிம்மீரவனத்தை அடைந்தார்கள். அப்போது பயங்கர ராட்சஸன் ஒரு வன் அவர்களை வழி மறித்து நிறுத் தினான். அவனது அனல்கக்கும் கண் களும் நீண்ட வெண்மையான பற் களும் எவரையுமே பயமுறுத்தக் கூடி யனவாக இருந்தன. அவனது இரைச்ச லில் காட்டு மிருகங்களெல்லாம் பயந்து ஓடலாயின. அவன் கையில் எரியும் தீவட்டி இருந்தது.

பாண்டவர்களும் துரெளபதியும் கூட வந்த பிராம்மணர்களும் அந்த ராட்சஸனைக் கண்டு பயந்து விட்டார் கள். துரெளபதி கண்களை மூடிக் கொண்டாள். தௌம்யர் பிசாசுகளை விரட்டும் மந்திரத்தை ஜெபிக்கலா னார். தருமர் அந்த ராட்சஸனிடம் ''நீ யாரப்பா? இங்கே எப்படி வந்தாய்?'' என்று கேட்டார்.

அந்த ராட்சஸனும் ''நான் பகாசுர னின் தம்பி என் பெயர் கிம்மீரன். காம் யக வனத்தில் என் இஷ்டப்படி திரிப வன் அதனால் இங்கு எந்த மனிதனும் வரக் கூடாது. நீங்கள் ஏன் இங்கே வந்தீர்கள்? உங்களை எல்லாம் இப் போதே விழுங்கப் போகிறேன்'' என்று இடி இடிக்கும் குரலில் கூவி னான்.

தருமரும் ''நாங்கள் பாண்டவர்கள் நாங்கள் கொடுத்த வாக்கைக் காக்க வனவாசம் மேற்கொண்டுள்ளோம். அதனால்தான் இங்கு வந்தோம்'' என் றார்.

கிம்மீரனும் ''ஓகோ! நீங்கள் பாண் டவர்களா? இவன்தான் பீமனா? இவன் என் அண்ணன் பகாசுரனைக்



கொன்றவன். என் நண்பன் இடும்பனைக் கொன்று அவனது தங்கை இடும்பியை மணந்தவன். வெகு நாட்களாக இவனைத்தான் எதிர் பார்த்துக் கொண்டிருந்தேன். இப்போது அகப்பட்டுக் கொண்டான். இவனைக் கொன்று இவன் ரத்தத்தைக் குடித்து ஆறுதல் அடைகிறேன். இவனோடு வந்த உங்களையும் விட மாட்டேன்'' என்று கூறினான்.

தருமர் பீமனைப் பார்க்கவே அவன் கடுங் கோபம் கொண்டு ஒரு மரத்தைப் பிடுங்கிக் கொண்டு ''அடே கிம்மீரா! என்னை நீ ஒன்றும் செய்ய முடியாது. நான்தான் உன்னை எம லோகத்திற்கு அனுப்பப் போகிறேன்'' என்று கூறியவாறே அவனைத் தாக்க லானான். அடிபட்ட கிம்மீரன் தன் கையிலிருந்த தீவட்டியை பீமன் மீது எறிந்தான்.

பீமன் அதைத் தன் காலால் நசுக்கி அணைத்தான். கிம்மீரனும் ஒரு மரத்தைப் பிடுங்கிக் கொண்டு வரவே இருவரும் மரங்களைக் கொண்டு ஒருவரையொருவர் தாக்கினார்கள். பீமன் அடித்த அடிகளால் சிறிது நேரத்தில் கிம்மீரன் களைத்துப் போனான். அப்போது பீமன் அவனைப் பிடித்துத் தூக்கி 'கிர் கிர்' ரென்று சுற்றி தரை மீது எறிந்து அவனது இடுப்பைத் தன் காலால் ஒரு மிதி மிதித்தான். கிம்மீரன் மரண ஓல மிட்டான். அவனது உயிர் அவனது உடலை விட்டுப் பிரிந்தது. பீமன் அவனது உடலைத் தூக்கி வெகு தூரத்தில் போய் விழும் படி எறிந்தான்.

இதைக் கண்டு தருமரும் மற்ற பாண்டவர்களும், துரௌபதியும் தௌம்யரும் பீமனை மிகவும் பாராட்டினார்கள்.

விதுரன் இவ்வாறு கூறி முடிக்கவே திருதராஷ்டிரன் பெருமூச்சு விட்ட வாறே கவலையில் மூழ்கினான். இதே சமயம் பாண்டவர்கள் நயவஞ்சகத்தால் சூதாட்டத்தில் தம் உடைமைகளை எல்லாம் இழந்து காட்டிற்குச் சென்று விட்டார்கள் என்று கேள்விப்பட்டு அவர்களைக் காண யாதவர்களும் பாஞ்சாலர்களும் வந்தார்கள் யாதவர்களோடு வந்த கிருஷ்ணர் பாண்டவர்களின் நிலை கண்டு கண் கலங்கினார்.

அவர் ''கயவர்களான துரியோதனன், துச்சாதனன், சகுனி, கர்ணன் ஆகிய நால்வரின் சூழ்ச்சியால் இந் நிலை ஏற்பட்டுள்ளது. அவர்கள் ஒழிந்தால் தான் தர்மத்தை நிலை நாட்ட முடியும்'' என்றார். துரௌபதி திருஷ்

டத்யும்னையும் மற்ற பாஞ்சாலர்களையும் அழைத்துக் கொண்டு வந்த கிருஷ்ணரைக் கண்டு கௌரவர்கள் தனக்கு இழைத்த கொடுமைகளைக் கூறிக் கண்ணீர் வடித்தாள்.

கிருஷ்ணரும் அவளுக்கு ஆறுதல் கூறி "துரௌபதி! உன்னை அவமானப்படுத்திய அக் கொடியவர்களுக்கு அழிவு காலம் நெருங்கி விட்டது. அவர்களெல்லாம் அழியத்தான் போகிறார்கள். விரைவில் பாண்டவர்கள் தாம் இழந்தவற்றையெல்லாம் திரும்பப் பெற்று விடுவார்கள்" என்று சமாதானப்படுத்தினார். திருஷ்டத்யும்னனும் சில வார்த்தைகள் கூறி துரௌபதியைத் தேற்றினான்.

கிருஷ்ணரும்தர்மரிடம் "நான்அப்போது துவாரகையில் இருந்திருந்தால் உங்கள் சூதாட்டத்தைக் காண வந்து தக்க விதமாய் உதவி செய்திருப்பேன். நான் உங்களோடு அப்போது இருந்திருந்தால் அந்த சூதாட்டம் கூட நடந்திருக்காது. துரியோதனன் ஏதாவது வம்பு செய்தாலும் அவனையும் ஒழித்திருப்பேன். நான் துவாரகைக்குத் திரும்பி வந்த போதுதான் யுயுதானன் உங்களைப் பற்றிய விஷயங்களைக் கூறினான். அதைக் கேட்டதுமே உங்களைப் பார்க்க ஓடோடி வந்தேன்" என்றார்.

அப்போது தருமர் "அப்போது நீங்கள் ஏன் துவாரகையில் இருக்கவில்லை?" என்று கேட்டார். கிருஷ்ணரும் "ராஜசூய யாகத்தின் போது சிசுபாலனை நான் கொன்றதால் அவனது தம்பி சால்வன் என் மீது கடுங்கோபம் கொண்டான். அவனிருந்த சோபா நகரைத் தாக்க நான் சென்றேன். சால்வன் தான் ஒரு விமானத்தில் வந்து முதலில் துவாரகையைத் தாக்கினான். அதனால் அங்கு பலத்த சேதம் ஏற்பட்டது. நான் அப்போது இந்திரப் பிரஸ்தத்தில் இருந்ததால் அத்தாக்குதலை எதிர்க்க முடிய






வில்லை. அதை உக்கிரசேனன் எதிர்க்க வேண்டியதற்கான ஏற்பாடு களைச் செய்து கதனையும் சாம்பனை யும் போருக்கு அனுப்பினார். அப் போரில் பிரத்யும்னன் தீரச் செயல் புரிந்து சால்வனைத் திக்குமுக்காடச் செய்தான். நானும் இச்சமயத்தில் இந் திரப் பிரஸ்தத்திலிருந்து துவாரகைக் குப் போய்ச் சேர்ந்தேன்'' என்று கூறி மேலும் தொடர்ந்தார்.

''துவாரகைக்கு வந்ததும் சால்வன் செய்த படு நாசத்தைக் கண்டு நான் சால்வனைக் கொல்லாமல் துவார கைக்குத் திரும்புவதில்லை என்று சபதம் செய்தேன். இதை அறிந்த சால் வன் தன் விமானத்தின் உதவியால் எங்கோ ஓடி மறைந்தான். அவன் கட லுக்கு மேல் ஆகாயத்தில் தன் விமா னத்தை நிறுத்தி அதிலிருந்தபடியே மாயப்போர்புரியலானான். அதனால் நான் அவனைத் தாக்க எய்த அம்புகள் பயனற்றுப் போயின. ஆனால் அவன் எய்த அம்புகளோ மழை கொட்டுவது போல என் மீது வந்து விழுந்தன. இதைக் கண்டு சால்வனோடு விமா னத்தில் இருந்தவர்கள் கை தட்டிச் சிரித்தார்கள். அந்த ஒலியைக் கேட்டு அது கிளம்பிய இடத்தை நான் அம்பு களால் தாக்கினேன். அதனால் சிலர் கீழே விழுந்து மடிந்தார்கள். ஆயினும் சால்வன் விமானத்தில் இருந்த படியே தாக்குதலை நடத்திக் கொண்டிருந் தான். இதைக் கண்ட என் தேரோட்டி தாருகன் கூட எனக்கு வெற்றி கிட்டுமா என்று சந்தேகப்படலானான்.

இந்நிலையில் யாரோ ஒருவன் வந்து என்னிடம் சால்வன் துவாரகை யிலுள்ள என் தந்தை வசுதேவரைக் கொன்று விட்டான் என்று தகவல் கொடுத்தான். அது உண்மைதானா என்று நான் யோசித்துக் கொண்டிருக் கும் போது வசுதேவரின் உயிரற்ற உடல் என் முன் விழுந்தது. அதைக் கண்டு என் தலை சுற்றியது என் கையி லிருந்த வில் நழுவியது. இதைக் கண்டு என் வீரர்களும் உற்சாகம் இழந்து நின்றார்கள்.

சற்று நேரத்திற்குப் பிறகே நான் இதெல்லாம் சால்வனின் மாய வேலைகள் என்று உணர்ந்தேன். அதனால் நான் என் சக்கராயுதத்தை ஏவி சால்வனையும் அவனது விமா னத்தையும் அதில் இருந்த மற்றவர் களையும் ஒரேயடியாக ஒழித்தேன். இவ்வாறு வெற்றி பெற்று துவார கைக்கு வந்த போதுதான் உங்களைப் பற்றி எனக்குத் தெரிய வந்தது. உடனே

உங்களைக் காண இங்கு வந்தேன்.''

பாண்டவர்களைக் காண வந்த யாதவர்களும் பாஞ்சாலர்களும் அவர்களுக்கு ஆறுதல் கூறி விட்டுத் திரும்பிச் சென்றனர். பாண்டவர்கள் வனவாசம் செய்து கொண்டிருக்கையில் இனி வரப் போகும் போர் பற்றி யோசிக்கலானர்கள். ஒருநாள் தருமர் அர்ஜுனனிடம் ''தம்பி! முன்பு விருத்தாசுரனுக்கு பயந்து தேவர்கள் தம் ஆயுதங்களை எல்லாம் இந்திரனிடம் ஒப்படைத்தார்கள். பிரதிஸ்மிருதி என்ற வித்தையை வியாச முனிவர் எனக்கு போதித்தார். இதைக் கொண்டு நீ இந்திரனை மகிழ்வித்து அந்த ஆயுதங்களை வாங்கி வா. போர் வந்தால் பீஷ்மர், துரோணர், கர்ணன் முதலானோர் துரியோதனின் பக்கமே இருப்பார்கள். அவர்களை வெல்வது எப்படி என நான் யோசித்த போது தான் வியாசர் இந்த வித்தையை எனக்கு அருளி அதை உனக்கும் கூறச் சொன்னார். என்னிடமிருந்து நீ அதைக் கற்றுக்கொண்டு இன்றே வடதிசை நோக்கிச் செல்'' என்றார்.

அர்ஜுனனும் தர்மரிடம் பிரதிஸ்மிருதியைக் கற்றுக் கொண்டு வில் அம்புகளை எடுத்துக் கொண்டும் கவசம் பூண்டும் எல்லோரையும் வணங்கி விட்டுக் கிளம்பினான். துரௌபதி அவனை வழி அனுப்பி கொஞ்ச தூரம் அவனோடு சேர்ந்து சென்றாள். அவள் ''நீங்கள் உங்கள் முயற்சியில் வெற்றி பெற்று வாருங்கள். நீங்கள் இல்லாமல் நாங்கள் கவலைப்படுவோம். விரைவில் நீங்கள் திரும்பி வரவும் கடவுளைப் பிரார்த்திப்போம். நம் எதிர்காலம் உங்கள்



கையில்தான் இருக்கிறது'' என்று கூறி அனுப்பினாள்.

அர்ஜுனன் வட திசையிலுள்ள இந்திரகீலாத்திரியை அடைந்தான். அப்போது ஒரு குரல் 'நில்' எனக் கூறி அவனை நிறுத்தியது. அர்ஜுனன் சுற்றிலும் பார்த்த போது ஒரு தவ யோகியை ஒரு மரத்தடியே கண்டான். அர்ஜுனன் அவரருகே போய் நின்றான்.

அவரும் ''யாரப்பா நீ? ஏதோ ஒரு போருக்குச் செல்பவனைப் போலக் கவசம் அணிந்து வில் அம்புகளுடன் இருக்கிறாயே. இந்தப் பகுதியில் உனக்கு என்ன வேலை? இங்கு முனிவர்களும், யோகிகளும் அமைதியான சூழ்நிலையில் தவம் செய்து கொண்டிருக்கிறார்கள். இந்த அமைதியைக் குலைக்கவா வந்திருக்கிறாய்? முத

லில் உன் ஆயுதங்களைக் தூர எறி'' என்றார்.

அர்ஜுனனோ அவ்வாறு செய்ய வில்லை. அவன் அவரிடம் ''ஐயா! நான் என் நோக்கம் நிறைவேறும் வரை இந்த ஆயுதங்களைக் கீழே போட மாட்டேன். நான் வந்த நோக்கமோ சக்தி வாய்ந்த ஆயுதங்களை இந்திரனிடமிருந்து பெற வேண்டும். அதற்காகத்தான் நான் சென்று கொண்டிருக்கிறேன்'' என்றான்.

அந்த யோகியோ ''அடேயப்பா! உன் நோக்கம் சக்தி வாய்ந்த ஆயுதங்களைப் பெறுவது என்றால் அதற்காக நீ மிகவும் கஷ்டப்பட வேண்டி இருக்கும். இதுவோ முனிவர்களும் தவ சிரேஷ்டர்களும் இருந்து தவம் செய்யும் பகுதி. இங்கு உன்னால் எதையும் செய்ய முடியாது. அப்படிச் செய்ய முயன்றாலும் இங்கு தவம் செய்யும் முனிவர்களுக்கு நீ இடையூறே செய்வாய். அதனால் இந்த முயற்சியைக் கைவிட்டு விட்டு நீ வந்த வழியே திரும்பிப் போய் விடு'' என்று பல முறை கூறியும் அர்ஜுனன் தன் ஆயுதங்களைக் கீழே போடாமல் இருக்கவே, அந்த யோகியும் ''உன் உறுதியைப் பாராட்டுகிறேன். நான்தான் இந்திரன். உனக்கு என்ன வேண்டுமோ கேள்'' என்றார். அர்ஜுனன் அவரை வணங்கி ''தேவா! எனக்கு திவ்விய அஸ்திரங்களைக் கொடுத்தருள வேண்டும்'' என்று வேண்டினான்.

இந்திரனோ ''உனக்கு அஸ்திரங்கள் எதற்கு? எல்லாவற்றிற்கும் மேலான சொர்க்கப் பதவியை அளிக்கிறேன். ஏற்றுக் கொள்'' என்றான். ஆனால் அர்ஜுனனோ ''எனக்கு சொர்க்க போகம் வேண்டாம். என் சகோதரர்கள் காட்டில் கஷ்டங்களை அனுபவித்துக் கொண்டிருக்கிறார்கள். இந்த நிலையில் நான் மட்டும் சுகமாக இருப்பதா? முடியாது. நான் க்ஷத்திரியன். இறக்கும் போது கூட நான் என் ஆயுதங்களை வைத்துக் கொண்டே இறக்கவே விரும்புகிறேன்'' என்றான்.

இந்திரன் அர்ஜுனனின் மன உறுதியைப் பாராட்டி ''உன் கோரிக்கை நிறைவேற நீ முதலில் சிவபிரானை தரிசிக்க வேண்டும். எனவே முதலில் அவரைத் தரிசனம் செய்ய முயற்சி செய்'' எனக் கூறி விட்டு மறைந்து போனான்.



# அழகிற்கு அழகு

பெரியசாமி பார்வை இழந்தவன். அவனுக்கு மூன்று புதல்வர்கள் இருந்தனர். அவர்களது மனைவியர் மூவரும் மிகவும் அழகானவர்களே. அழகிய பெண் ஒருத்தியின் படம் வரையும் நோக்கத்தோடு ஒரு ஓவியன் அவர்களது வீடு தேடி வந்தான். அவர்களில் யார் அழகானவர் என்று அவனால் நிர்ணயிக்க முடியவில்லை.

அவன் அந்த மூன்று பெண்களிடமே அவர்களில் யார் அழகானவர் என்று கேட்டதில் ஒவ்வொருவரும் தானே அழகானவள் எனக் கூறினார். அவர்களது கணவன்கள் ஒவ்வொருவனும் தன் மனைவியே அழகானவள் என்று கூறினார்கள். ஊராரிடம் ஓவியன் தன் கேள்வியைக் கேட்ட போது ஊரார் மூவருமே நல்ல அழகிகள் என்று கூறினார்கள்.

அன்றிரவு ஓவியன் அங்கு தங்கிப் பெரியசாமியிடம் தன் பிரச்னையைக் கூறினான். பெரிய சாமியும் "என் மருமகள் மூவரும் நல்ல அழகிகளே. இதை அவர்களும் அவர்களது கணவன் களும், ஊராரும் கூறுகிறார்கள். நீயும் கூறுகிறாய். நீங்கள் எல்லோரும் புற அழகைப் பார்த்து அவ்வாறு கூறுகிறீர்கள். நான் அவர்களது புற அழகோடு அக அழகையும் அதாவது மனத்தையும் சேர்த்துப் பார்த்தே முழு அழகைத் தீர்மானிப்பவன் அப்படிப் பார்த்தால் என் இரண்டாவது மருமகளே மிக அழகானவள்" என்றான்.

ஓவியனும் அதுகேட்டு "உங்கள் முடிவே சரி. நாளை உங்களது இரண்டாவது மருமகளின் படத்தையே வரைகிறேன்" என்று மகிழ்ச்சியுடன் கூறினான்.



# வேங்கை மரம்

**வே**ங்கை மரம் காட்டில் மிக உயர மாக வளர்கிறது. இவை நம் நாடு முழுவதிலும் வளர்ந்தாலும் இமய மலைச்சாரலிலும், மேற்கு வங்காளம், சோட்டா நாக்பூர், அந்தமான் தீவுகள் ஆகிய இடங்களில் அதிகமாக வளர் கின்றன. ஈரப்பசையுள்ள இடங்களில் இவை நன்கு வளர்கின்றன. இவற்றைச் சாலைகளின் இரு புறங்களிலும் அழ கிற்காக வளர்க்கிறார்கள். இவற்றின் வேர்கள் அதிகப் பருமனாக இருக்காத



தால் பெரும் புயல்களின் இம்மரங்கள் சாய்ந்து விடுகின்றன.

மார்ச், ஏப்ரல் மாதங்களில் இம் மரங்கள் பூக்க ஆரம்பிக்கின்றன. மலர் கள் கொத்துக் கொத்தாய் இருக்கும். இளம் பச்சை, வெள்ளை நிறங்களில் இவை இருந்து மல்லிகைப் பூ போல நறுமணம் வீசும். இலைகள் சிறியவை. அக்டோபர் - நவம்பரில் இலைகள் உதிர்ந்து இரண்டு மாதங்களுக்கு இம் மரங்கள் மொட்டையாக இருக்கும், ஏப்ரல் மாதத்தில் தான் மீண்டும் துளிர்க்கும். ஆகஸ்ட் - செப்டம்பர் களில் இதன் காய்கள் முதிரும்.

மிக உறுதியான மரமான இதனை அறுத்து வண்டிச் சக்கரங்கள் ஏர், கலப்பை, நுகத்தடி போன்றவற்றைச் செய்கிறார்கள்.

இம்மரம் இலக்கியங்களிலும் இடம் பெற்றுள்ளது. காளிதாசரின் சகுந்தலை இதன் மலர்களை அணிந்து அழகுற விளங்கினாள் என்று படிக்கிறோம். துளசிதாசரின் ராமசரிதமானஸில் இராமனின் மனம் வேங்கை மலர் போல மென்மையானதெனவும் படிக் கிறோம்... ரெட்யார்ப் கிப்ளிங் இம்மரத் தைத் தம் படைப்பு ஒன்றில் வர்ணித் துள்ளார்.

நம் நாட்டு முனிவர்கள் - 14

# காலவர்

காலவர் விசுவாமித்திர முனிவரின் புதல்வர். அவர் ஒருமுறை ஆற்றில் நின்று சூரியனுக்கு அர்க்கியம் விட்டுக் கொண்டிருந்தபோது ஆகாய வழியே சென்று கொண்டிருந்த சித்திரசேனன் என்ற கந்தர்வன் எச்சிலை உமிழ்ந்தான். அந்த எச்சில் காலவரின் கையில் விழுந்தது. அகம்பாவம் கொண்ட அக்கந்தவர்வன் மரணமடைய வேண்டும் என அவர் கிருஷ்ணரிடம் கூற அவரும் அவ்வாறே நடக்கும் என்றார். இதை நாரதர் அந்த கந்தர்வனிடம் கூறவே அவன் பயந்து தான் உயிர் தப்ப ஏதாவது ஒரு வழியைக் கூறுமாறு அவரிடம் கெஞ்சினான். நாரதரும் ''நீ உன் இரு மனைவிகளோடு போய் சுபத்திராவின் காலில் விழு. அவள் உன்னைக் காப்பாற்றுவாள்'' என்று யோசனை கூறினார்.

அவர்களும் சுபத்திராவின் வீட்டின் பின்புறம் போய் நின்று கூக்குரல் போட்டார்கள். சுபத்திராவும் வெளியே வந்து ''ஏன் இப்படி அழுது கொண்டிருக்கீறீர்கள்?'' என்று கேட்கவே அவர்களும் ''எம் கணவர் உங்கள் தமையனால் கொல்லப்படப் போகிறார். எனவே நாங்களும் தீமுட்டி அதில் விழுந்து இறப்போம்'' எனக் கந்தர்வனின் இரு மனைவிகளும் கூறினார்கள்.

சுபத்திராவும் அவர்களுக்கு ஆறுதல் கூறித் தன் கணவன் அவர்களைக் காப்பாற்றுவானென வாக்களித்தாள். அவள் அர்ஜுனனிடம் விஷயத்தைக் கூற அவன் சித்திரசேனனைச் சுற்றிச் கண்ணுக்குத் தெரியாத அம்புகளால் ஒரு கவசத்தை அமைத்தான். இதனால் கிருஷ்ணரின் ஆயுதங்களால் கந்தர்வனை எதுவும் செய்ய முடியவில்லை. இதனால் கிருஷ்ணர் அர்ஜுனனுடன் போர் புரிய நின்றார். அப்போது சுபத்திரா அவர்களுக்கு மத்தியில் நின்று போர் நடக்காமல் தடுத்தாள்.

கிருஷ்ணர் கந்தர்வனிடம் ''நீ காலவரிடம் மன்னிப்பு கேள்'' எனவே அவனும் காலவரின் கால்களில் விழுந்து மன்னிப்பு கோரினான். காலவரும் கோபம் தணிந்து கந்தர்வனை மன்னித்து ''இனி அகம்பாவத்தை விட்டு விடு'' எனக் கூறி அனுப்பினார்.



# உங்களுக்குத் தெரியுமா?

1. சுவாமி விவேகானந்தர் சிகாகோவில் கலந்து கொண்ட உலக மதங்கள் மாநாடு எந்த ஆண்டில் நடைபெற்றது?
2. 1781ல் யார்க் டௌனில் ஆங்கிலேயர் படை தோற்றதால் அமெரிக்கா சுதந்திரம் பெற்றது. தோற்ற ஆங்கியேரின் படைத் தளபதி யார்?
3. மூட நம்பிக்கை, தலைவிதி என்பனவற்றை எதிர்த்த இந்து மதத் தலைவர் யார்?
4. ரோனால் அமண்ட்ஸன் 1911ல் தென் துருவத்தை அடைந்தார். இவர் எந்த நாட்டவர்?
5. ஆந்திர மாநில சிவராம் பள்ளி எவ்வாறு புகழ் பெற்றது?
6. சுமியன் பாலைவனம் எங்குள்ளது?
7. வந்தே மாதர கீதம் எந்த நாவலில் யாரால் எழுதப்பட்டது?
8. பெர்டினண்ட டி லெசெப்ஸ் ஏன் புகழ் பெற்றார்?
9. இந்தியாவில் டோக்கன் கரன்ஸியை முதன் முதலாகப் புகுத்தியவர் யார்?
10. பிரிட்டிஷ் வீரர் டி.ஈ. லாரன்ஸ் வேறு ஒரு நாட்டின் சார்பில் போராடினார். அந்த நாடு எது?
11. ஒரு இந்தியப் புரட்சி வீரர் சிறையில் உண்ணாவிரதம் மேற் கொண்டு இறந்தார். யார் அவர்?
12. கிருஸ்துவிற்குப் பின் பிறந்த சிறந்த யூதர் ஆல்பர்ட் ஐன்ஸ்டீன் என்று யார் கூறினார்?
13. நாட்டிய சாஸ்திரத்தின் ஆசிரியர் யார்?
14. ஹாங்காங்கிலிருந்து மருத்துவப் பட்டத்தை முதன் முதலில் பெற்ற சீனத் தலைவர் யார்?
15. திரிமூர்த்திவிக்கிரகத்தை பிரபலப்படுத்திய குகைக் கோவில் எங்குள்ளது?
16. அமெரிக்கன் லைப்ரரி ஆஃப் காங்கிரஸை நிறுவியர் யார்?

## விடைகள்

1. 1893
2. லார்ட் கார்ன்வாலிஸ்
3. சுவாமி விவேகானந்தர்.
4. நார்வே.
5. பூதான இயக்கத்தால்.
6. சூடான்.
7. வங்காள நாவல் ஆனந்த மடம், பங்கீம் சந்திரர்.
8. சூயஸ் கால்வாயை அமைத்த பிரெஞ்சுக்காரர்.
9. ஃபிரோஜ் துக்ளக்.
10. அரேபியா.
11. ஜத்தீன் தாஸ்.
12. ஜே.பி.எஸ். ஹால்டன்.
13. பரத முனிவர்.
14. சன்யாட்சென் சீனக் குடியரசை நிறுவியர்
15. மும்பயினருகேயுள்ள எலிபண்டா.
16. ஹெர்பர்ட் புட்னம்.

# பொன்மயமான பொழுதுகள் நெ. 4: விடைகள்



1. ஹெச்.ஜி. வெல்ஸ் எழுதிய 'தி வார் ஆஃப் தி வேர்ல்ட்ஸ்' என்ற நாவலின் அடிப்படையில் வானொலி நாடகம் அமைக்கப்பட்டது.

2. டையானா. ரோமானியர். இந்த சந்திர தேவதை வேட்டைக்கும் அதிபதி எனக் கருதுவது.



3. பாழ்பட்டு அழிந்து கொண்டிருக்கும் நட்சத்திரம்

4. சுக்கிர கிரகம். இந்த கிரகம் ஒன்றுதான் கிழக்கிலிருந்து மேற்காகச் சுழலும்.



5. ஃபெர்டினண்ட் மெகலான். லார்ஜ் மெகலானிக் க்ளௌனட், ஸ்மால் மெகலானிக் க்ளௌனட். இந்த இரு நட்சத்திரப் பாதைகளும் நமக்கு மிக அருகே உள்ளன.

6. வடஅமெரிக்காவிலுள்ள அரிஜோனாவில்

7. ஹெலீஸ் வால் நட்சத்திரம். இது 76 ஆண்டுகளுக்கு ஒருமுறை பூமியை நோக்கி வருகிறது. கடைசி முறையில் இது 1986ல் புலப்பட்டது.

---

## விண்வெளி வீரர்

விண்வெளிக் கலம் சென்ற பாதை இதுவே.





# திருமணம் நடப்பதெல்லாம்...!

சீதம்மாள் தன் மகள் மாலதியுடன் மீனம்மாவின் வீட்டில் இரண்டு வருடங்களுக்கு முன் வாடகைக்குக் குடி புகுந்தாள். அப்போது மீனம்மாவின் மகன் சோமு வேலை எதுவும் கிடைக்காமல் திண்டாடிக் கொண்டிருந்தான். மீனம்மா சீதம்மாள் கொடுத்து வந்த வாடகையில் தான் சிரமப்பட்டு தன் வாழ்க்கையை நடத்தி வந்தாள்.

இதைக் கண்ட சீதம்மாள் மீனம்மாளிடம் ''இதோ பார். உன் மகன் வேலை கிடைக்காமல் அலைகிறான். அவன் சொந்தமாக ஏன் ஒரு தொழிலை ஆரம்பித்து நடத்தக் கூடாது? என் கணவர் இறந்த போது எனக்கு ஐம்பதாயிரம் ரூபாய் வைத்து விட்டுப் போனார். அதிலிருந்து முப்பதாயிரம் ரூபாய் கொடுக்கிறேன். உன் மகன் ஏதாவது ஒரு தொழிலை ஆரம்பிக்கட்டும் இன்னும் இரண்டு வருடங்களுக்கு என் மகளின் திருமணம் பற்றிக் கவலைப்படப் போவதில்லை. அதற்குள் நீ அந்தப் பணத்தைத் திருப்பிக் கொடுத்தால் போதும்'' என்றாள்.

மீனம்மாவும் அந்தப் பணத்தை வாங்கிக் கொண்டு ''சீதம்மா! உன் மகளின் திருமணம் பற்றிக் கவலைப் படாதே. அவளை என் மருமகளாக ஏற்றுக் கொள்கிறேன். நீ கொடுத்த இந்தப் பணம் உன் பெண்ணுக்காக நீ கொடுத்த வரதட்சணை, சீர்ப்பணம் என்று நினைத்துக் கொள்கிறேன். சோமு தொழிலில் கால் ஊன்றியதும் கல்யாணத்தையும் செய்து விடலாம்'' என்றாள். இதனால் சீதம்மா தன் மகளின் திருமணத்தைப் பற்றிக் கவலைப்படாமல் இருந்தாள்.

சோமு தொழிலை ஆரம்பித்தான். அவனது நல்ல காலம் தொழில் நன்கு வளர்ச்சியுற்று நல்ல லாபத்தையும் தந்தது. இதைக்கண்டு சீதம்மாள் இனி மாலதியின் திருமணம் பற்றி மீனம்மா

—பாபநாசம் சாமா—



சோமுவுக்குத் தன் பெண்ணைக் கொடுக்க இவ்வூரின் பெரிய வியாபாரி பலராமன் முன் வந்திருக்கிறார். அவருக்கு இருப்பது ஒரே பெண். பல லட்சங்களுக்குச் சொத்தும் இருக்கிறது. திருமணத் தேதியைக் கூட முடிவு செய்து விட்டோம். அடுத்த வாரம் முகூர்த்தம்'' என்று கூறிவிட்டு அவளின் பதிலை எதிர் பார்க்காமல் அங்கிருந்து சென்று விட்டாள்.

சீதம்மாள் இடிந்து போய் விட்டாள் பணம்தான் எப்படி மனிதர்களின் மனதை மாற்றி விடுகிறது! சோமுவின் கல்யாணம் ஆன மறு நாளே சீதம்மாள் மீனம்மாளின் வீட்டிலிருந்து போய் வேறு எதாவது ஒரு வீட்டை வாடகைக்கு அமர்த்திக் கொள்வது என்று தீர்மானித்துக் கொண்டாள். அதற்காக வீடு தேடும் முயற்சியில் தீவிரமாக ஈடுபட்டாள்.

ஓரிடத்தில் அவள் ஒரு வீட்டின் ஒரு பகுதி பூட்டப்பட்டிருப்பதைக் கண்டாள். அந்த வீட்டுத் திண்ணையின் இருபத்தைந்து வயது மதிக்கத் தக்க இளைஞன் உட்கார்ந்திருந்தான். அவனிடம் சீதம்மாள் ''என்னப்பா! இங்கே வாடகைக்கு வீடு ஏதாவது கிடைக்குமா?'' என்று கேட்டாள். அவனும் அவளை ஒருமுறை ஏற இறங்கப் பார்த்து விட்டு ''ஆமாம் இந்த வீட்டில் ஒரு பகுதி இன்னமும் இரண்டு நாட்களில் காலியாகப் போகிறது. நான்தான் இந்த வீட்டின் சொந்தக்காரன். காலியாகப் போகும் பகுதியைப் பார்க்கிறீர்களா? சாவி என்னிடம் இருக்கிறது'' என்று கூறினான்.

சீதம்மாளும் வீட்டின் அப்பகு

விடம் பேசி முகூர்த்த நாளைக் குறித்து விட வேண்டியதுதான் என்று எண்ணினாள்.

அப்போதுதான் மீனம்மாள் சீதம்மாள் திடுக்கிடும்படிக் கூறினாள் ''சீதம்மா! இந்தா நீ கொடுத்த முப்பதாயிரம் ரூபாயும் அதற்கான வட்டிப் பணம் ஐயாயிரமும். பணத்தை எண்ணி எடுத்து வைத்துக் கொள்'' என்றாள். அப்போது சீதம்மாள் ''என்ன மீனம்மா இது? நீ என் மகளை உன் மருமகளாக ஏற்றுக் கொள்ளப் போவதாயும், வரதட்சணை சீர் வகையில் இந்தப் பணத்தை ஏற்பதாகவும் அன்று கூறினாயே. இப்போது இதென்ன செயல்?'' என்று கேட்டாள்.

மீனம்மாளும் ''அன்று இருந்த நிலையில் அப்படிச் சொன்னேன். இன்று நிலைமை மாறி விட்டது.

தியை பார்த்துவிட்டு ''சரி நான் இதை வாடகைக்கு எடுத்துக் கொள்கிறேன். வாடகை எவ்வளவு? எவ்வளவு முன் பணம் கொடுக்க வேண்டும்?'' என்று கேட்டவாறே தன் பணப் பையை எடுத்தாள். அந்த இளைஞனும் ''வாடகை இருநூறு ரூபாய். முன் பணமாக மூன்று மாத வாடகைப் பணத்தைக் கொடுக்க வேண்டும்'' என்றான்.

இருக்க ஒரு வீடு கிடைத்ததே என்ற மகிழ்ச்சியிலும் மீனம்மாளின் வீட்டை விரைவில் காலி செய்து விட வேண்டுமென்ற ஆர்வத்திலும் சீதம்மாள் முன் பணமாக அந்த வாலிபனிடம் அறுநூறு ரூபாயைக் கொடுத்து விட்டு இரண்டு நாட்களுக்குப் பின் சாமான்களுடன் வருவதாக அவனிடம் அவள் கூறி விட்டுச் சென்றாள்.

சோமுவின் கல்யாணம் முடிந்த மறுநாளே சீதம்மாள் மீனம்மாளிடம் ''நான் வேறு வீட்டிற்குக் குடிபுகப் போகிறேன். இதோ சாமான்களை வண்டியில் ஏற்றிக் கொண்டிருக்கிறேன்'' என்றாள். அதைக் கேட்ட மீனம்மாள் சற்றும் கவலைப்படாமல்'' அப்படியா? தாராளமாகப் போய்க் கொள், யார் வேண்டாம் என்று சொன்னார்கள்?'' என்று இலேசான கேலிச் சிரிப்புடன் கூறினாள். சீதம்மாளும் தன் மகள் மாலதியை அழைத்துக் கொண்டு சாமான் வண்டியுடன் போய் தான் வாடகைக்குப் பேசிய வீட்டின் முன் வண்டியை நிறுத்தி சாமான்களை இறக்கினாள்.

பிறகு அவள் ''ஐயா! சாமான்களுடன் வந்து விட்டேன். வெளியே



வாருங்கள். எனக்கு வாடகைக்கு விட்ட பகுதியைத் திறந்து விடுங்கள்'' என்று குரல் கொடுத்தாள், அப்போது அறுபது வயதிற்கும் மேற்பட்ட கிழவர், ஒருவர் அவ் வீட்டிலிருந்து வெளியே வந்து ''யாரம்மா நீங்கள்? உங்களுக்கு என்ன வேண்டும்? சாமான்களுடன் வந்திருக்கிறீர்ளே. யாருடைய வீட்டு விலாசமாவது வேண்டுமா?'' என்று கேட்டார்.

அது கேட்டு சீதம்மாள் ''இந்த வீட்டில் ஒரு பகுதி காலியாகப் போவதாகச் சொல்லி உங்கள் மகன் அதைத் திறந்து காட்டி அறுநூறு ரூபாய் முன் பணமாகப் பெற்றுக் கொண்டாரே. நான் இன்று சாமான்களுடன் வருவதாக அன்று சொல்லி விட்டுப் போனேன். கூப்பிடுங்கள் உங்கள் மகனை. கேட்கலாம்'' என்றாள். அது



கேட்டு அக்கிழவர் ''எனக்கு மகனே கிடையாது. மேலும் நீங்கள் கூறும் பகுதியில் கடந்த ஐந்து வருடங்களாக பள்ளி ஆசிரியர் பத்மநாபன் இருந்து வருகிறார். அவர் ஒன்றும் அப்பகுதியை காலி செய்யப் போவதாக இல்லையே. இது என்ன வேடிக்கை!'' என்று கூறி யோசிக்கலானார்.

சீதம்மாளும் ''நான் அவனை உங்கள் மகன் என்று எண்ணிப் பணத்தைக் கொடுத்தேனே. பார்ப்பதற்கு சிவப்பாகவும் ஒல்லியாகவும் இருப்பத்தைந்து வயது மதிக்கத்தக்கவனாயும் இருந்தானே. இந்த வீட்டின் சொந்தக்காரன் என்று சொல்லிக் கொண்டு இவ்வீட்டின் அப்பகுதியின் சாவியை வேறு வைத்துக் கொண்டிருந்தானே'' என்று கண் கலங்கிக் கூறினாள்.

கிழவரும் சற்று யோசித்து விட்டு ''நீங்கள் சொன்ன அடையாளங்களைக் கொண்டு பார்த்தால் அவன் என் தம்பியின் பேரன் சுந்தரம் என்று தெரிகிறது. அவன் தான் இரண்டு நாட்களுக்கு முன் இங்கு தன் ஊரான தோப்பூரிலிருந்து வந்திருந்தான். அன்று பள்ளி ஆசிரியர் வரத் தாமதமானதால் அவரது மனைவி சுந்தரத்திடம் வீட்டு சாவியைக் கொடுத்து விட்டு ஆசிரியர் வந்தால் அதைக் கொடுக்கச் சொல்லி எங்களுடன் கோவிலுக்குக் கிளம்பி விட்டாள். அவன் தான் உங்கள் பணத்தை வாங்கிக் கொண்டு போயிருக்கிறான். அவனால் தான் உங்களுக்கு இந்தத் தொல்லை ஏற்பட்டு உள்ளது. சரி. இப்போது உங்கள் சாமான்களை என் ஒரு அறையில் போட்டு விட்டு வேறு வீடு கிடைக்கும் வரை இங்கேயே இருங்கள்'' என்றார்.

சீதம்மாளும் அவருக்கு நன்றி தெரிவித்தாள். தாயும் மகளும் சாமான்களைக் கிழவர் காட்டிய அறைக்குள் வைத்தார். மறுநாள் சீதம்மாள் தான் தோப்பூருக்குப் போய் சுந்தரத்தைக் கண்டு பேசி விட்டு வருவதாகக் கூறி விட்டுச் சென்றாள். தோப்பூரில் வெகு எளிதில் சுந்தரத்தின் வீட்டைக் கண்டு பிடித்து விட்டாள். அந்த வீட்டிற்குப் போன போது வாசல் கதவு மூடப்பட்டிருந்தது. உள்ளே இருவர் பேசிக் கொண்டிருந்தது அவள் காதில் விழுந்தது. சுந்தரத்தின் குரல் ''அம்மா! உன் வைத்திய செலவுக்கு எப்படியோ பணம் கிடைத்தது என்றாலும் நான் அந்தப் பெண்மணியை ஏமாற்றியது என் மனதை உறுத்துகிறது. இவ்வளவு நாட்களாக வேலை எதுவும் செய்யாமல் ஊர் சுற்றிக் கொண்டிருந்தேன்.

இதனால்தான் யாரிடம் கடன் கேட்டாலும் அவர்கள் என்னை நம்பவில்லை. ஏன், பெரிய தாத்தா கூட நான் உனக்கு உடம்பு சரியில்லை என்று கூறியதை நம்பவில்லை. நாளை முதல் நாண் நம் வயலில் உழைத்துப் பணம் சம்பாதிப்பேன். அந்தப் பெண்மணியைத் தேடிக் கண்டுபிடித்து அவரது பணத்தையும் கொடுத்து விடுவேன்'' என்றான்.

அவனது தாயும் ''அப்படியே செய். நீ திருந்தி விட்டாயே. அது போதும். இனிமேலாவது புத்தியுடன் பிழை. நீயும் அங்கும் இங்கும் திரியாமல் குடும்பத்தில் அக்கறை கொள்ள உனக்கு ஒரு கால்கட்டும் போட்டாக வேண்டும். விரைவில் உனக்குத் திருமணத்தையும் செய்து வைத்து விடுகிறேன்'' என்றாள். அப்போது சீதம்மாள் கதவைத் தட்டவே சுந்தரம் போய்க் கதவைத் திறந்து பார்த்தான். அங்கே சீதம்மாள் நிற்பதைக் கண்டு நடுங்கி விட்டான்.

சீதம்மாள் புன்னகை புரிந்து ''சுந்தரம்! எனக்கு எல்லாம் தெரிந்து விட்டது இப்போது நீ திருந்தி விட்டாய். அதுவே எனக்கு மகிழ்ச்சியைத் தருகிறது'' எனக்கூறி அவனது தாயாரைப் பார்த்து ''உங்கள் பேச்சிலிருந்து நீங்கள் உங்கள் மகனுக்கு மணம் செய்து வைக்க நினைப்பதாக தெரிகிறது. என் மகள் மாலதி பார்க்க அழகாகவும் வீட்டு வேலைகளைச் செய்து பழகியவளாகவும் இருக்கிறாள். நீங்கள் ஒரு முறை உங்கள் பெரியப்பாவின் வீட்டிற்கு வந்து பாருங்கள். வேறு வீடு வாடகைக்குக் கிடைக்கும் வரை நானும் என் மகளும் அங்குதான் இருப்போம்'' என்றாள்.

சுந்தரத்தின் தாயாரோ ''நாங்கள் அங்கே வரவே வேண்டாம். நீங்கள் உங்கள் பெண்ணை அழைத்துக் கொண்டு உங்கள் சாமான்களுடன் இங்கே வந்து விடுங்கள். இனிமேல் உங்களுக்கு அந்த ஊரில் என்ன வேலை? அங்கே வாடகைக்கு வீடு ஒன்றும் பார்க்க வேண்டாம். இனிமேல் மாலதிக்கும் சுந்தரத்திற்கும் கல்யாணம். இந்த வீடு உங்களுடையதும் தான்'' என்றாள்.

சீதம்மாளும் ''திருமணங்கள் சொர்க்கத்தில் நிச்சயிக்கப்படுகின்றன என்று சரியாகத்தான் சொன்னார்கள்'' என்று கூறினாள் மகிழ்ச்சி ததும்ப.





# மாறுபட்ட இருவர்

மாதவனும் கோவிந்தனும் இணை பிரியாத நண்பர்கள். மாதவன் பணக்காரன். கோவிந்தன் ஏழை. இருவரும் திருமணம் புரிந்து கொண்டால் ஒரே ஊர் பெண்களையே தேர்ந்தெடுத்து மணந்து கொள்வது என்றும் அந்தப் பெண்களும் தம்மைப் போலவே நெருங்கிய நட்புறவு கொண்டவர்களாகத்தான் இருக்க வேண்டுமென்றும் தீர்மானித்துக் கொண்டார்கள்.

அம்முயற்சியில் இறங்கிய அவர்கள் இருவரும் ஒரு கிராமத்தை அடைந்தார்கள். அப்போது அவர்கள் இரு அழகிய பெண்களை அவ்வூருக்குக் குடி நீர் வழங்கும் கிணற்றினருகே நின்று கொண்டிருப்பதைக் கண்டார்கள். அப்போது மாதவன் கோவிந்தனிடம் "இவர்களை நாம் மணந்து கொள்ளலாம் நான் போய் விவரம் அறிந்து வருகிறேன்" என்று கூறி விட்டுக் கிணற்றிற்குச் சற்று தூரத்தில் நின்று அவர்கள் பேசுவதைக் கேட்கலானான்.

அப்போது அவர்களில் ஒருத்தி "மீனாட்சி! நீ எப்படிப்பட்ட கணவனை அடைய விரும்புகிறாய்?" என்று கேட்டாள். மீனாட்சியும் அப்பெண்ணிடம் "கோமதி! நான் ஆசைப்படுவது மிகப் பெரிய அளவில். ஏராளமான நகைகள், பட்டுப் புடவைகள் என்று என் கணவர் வாங்கிக் கொடுத்துக் கொண்டே இருக்க வேண்டும். வீடும் கப்பல் போல இருந்து பல வேலையாட்கள் இருக்க தினமும் என் வீட்டில் விருந்து சாப்பாடுதான் தயாராக வேண்டும். இவையெல்லாம் நான் ஆசைப்படுபவை என்றாலும் உண்மையில் இவை எல்லாம் கிடைக்க வேண்டுமே" என்று சிரித்துக் கொண்டே சொன்னாள்.

கோமதி பெருமூச்சு விட்டவாறே "எனக்கு இப்படிப்பட்ட ஆசைகள் இல்லை. இருப்பதைக் கொண்டு திருப்தி அடைவேன். நகையோ

—காரை. குருமூர்த்தி—

புடவைகளோ கிடைப்பது அவரவர் அதிர்ஷ்டத்தைப் பொறுத்தது. ஏதோ பசியாற சாதமும் கீரை மசியலும் கிடைத்தாலே போதும்'' என்றாள்.

இதைக் கேட்ட மாதவன் மனதில் ஒரு யோசனை தோன்றியது. அந்த இரு பெண்களும் மணமாகாதவர்கள். அவர்களில் தான் கோமதியை மணந்து கொண்டால் அதிக குடும்பச் செலவு ஆகாது. மீனாட்சியை மணந்தாலோ ஏகப்பட்ட செலவைச் செய்து ஓட்டாண்டியாகத் தான் வேண்டி வரும். எனவே அவன் திரும்பி வந்து கோவிந்தனிடம் ''அவர்கள் நாம் நினைத்தது போல ஆருயிர்த் தோழிகள். மணமாகாதவர்கள். அழகிகள். அந்த சிவப்புப் புடவை கட்டி இருப்பவளை நான் மணந்து கொள்கிறேன். சந்தனக் நிறப் புடவைக்காரியை நீ மணந்து கொள்'' என்றான். சிவப்புப் புடவையை உடுத்தி இருந்தவள் கோமதி. மற்றவள் மீனாட்சி.

கோவிந்தனும் அதற்குச் சம்மதித்தான். பேச்சு வார்த்தைகள் நடந்து மாதவன் கோமதியையும் கோவிந்தன் மீனாட்சியையும் மணந்து கொண்டார்கள். கோமதி மாதவனின் பங்களாவில் குடி புகுந்தாள். மீனாட்சி கோவிந்தனின் சிறு வீட்டில் குடித்தனம் செய்யலானாள்.

கோமதி மாதவனின் வீட்டில் அடியெடுத்து வைத்ததுமே ''இங்கே வேலைக்காரன் யாருமே இல்லையா?'' என்று கேட்கவே மாதவன் ''வேலைக்காரர்கள் எதற்கு? நாமே செய்து கொண்டால் போயிற்று. அதனால் எல்லா வேலைக்காரர்களையும் வீட்டை விட்டு அனுப்பி விட்



டேன்'' என்றான். கோமதியும் ''சரி, சமையல் என்ன? வடை, பாயசம், அப்பளம், கூட்டு, கறி, அவியல், மசியல், பச்சடி என்று எல்லாம் செய்து விடுகிறேன்'' என்றாள்.

மாதவனோ ''ஐயோ! இப்படி சமையல் செய்தால் நான் திவாலாகி விடுவேன். பேசாமல் ஒரு சாதத்தை வடித்துக் கீரையை மசித்து விடு. அது போதும்'' என்றான்.

அன்றிரவு தூங்கு முன் கோமதி ''நமக்கு இவ்வளவு பணமும் வசதிகளும் இருக்கின்றனவே. எனக்கு நகைகளும் பட்டுப்புடவைகளும் வாங்கிக் கொடுங்கள்'' என்றாள். மாதவனோ ''முடியாது. இதெல்லாம் வீண் செலவு. இருப்பதைக் கொண்டு திருப்தி அடை'' என்றான். கோமதியோ ''வடிகட்டின கஞ்சனாக இருக்

கிறீர்கள்'' என்று வெறுப்புடன் கூறினாள்.

மறுநாள் மாதவன் காலையில் எழுந்த போது தன் வீட்டில் புதிதாக நான்கு பேர்கள் நடமாடுவதைக் கண்டு ''யாரப்பா நீங்கள்?'' என்று கேட்டான். அவர்களும் ''நாங்கள் இங்கு பணிபுரியும் வேலையாட்கள். எஜமானியம்மா தான் வேலைக்கு வரச்சொன்னார்கள்'' என்று கூறினார்கள்.

மாதவன் அவர்களை வெறித்துப் பார்க்கையில் கோமதி வந்து ''இவர்களை நான்தான் நியமித்தேன். இவர்கள் இங்கு வேலை செய்யத்தான் செய்வார்கள்'' என்று அடித்துக் கூறினாள். மாதவன் எதுவும் கூற முடியாமல் இருந்தான். மத்தியான்ன சாப்பாட்டிற்கு அவன் உட்கார்ந்த போது சமையல்காரன் வடை பாயசத்துடன் உணவு பரிமாறினான்.

அதைக் கண்ட மாதவன் ''ஐயோ? இதென்ன?'' என்று கூவவே கோமதியும் ''கத்தாதீர்கள். வேலைக்காரர்கள் சிரிக்கப் போகிறார்கள்! நாம் இந்த மாதிரி சாப்பாட்டை தினமும் நாமும் சாப்பிட்டுப் பிறருக்கும் போடலாம். அவ்வளவுக்கு சக்தி நமக்கு உள்ளது'' என்றாள்.

இதற்கு இரண்டு நாட்களுக்குப் பின் கோமதி தங்க நகைகளையும் பட்டுப் புடவைகளையும் வாங்கி வந்து தன் கணவனிடம் காட்டினாள். மாதவனோ கன்னத்தில் கை வைத்துக் கொண்டு கவலையில் உட்கார்ந்தான். பிறகு அவன் ''அன்று நீ உன் சிநேகிதி மீனாட்சியிடம் கூறியதைக் கேட்டு ஏமாந்து விட்டேன். நீ சொன்னது அவ்வளவும் பொய்'' என்று பல்லைக் கடித்து கொண்டு கூறினான்.

அதைக் கேட்ட கோமதி ''ஓ! அதைக் கேட்டா என்னை மணந்து கொண்டீர்கள்! நான் மீனாட்சி கூறுவது போலக் கூறி நடித்தேன். அவளும்



நான் ஆசைப்படுவதை யெல்லாம் கூறி சிரித்தாள். எனவே என் ஆசை களுக்கு அளவே இல்லை. நமக்கு வசதி இருக்கிறது. எனவே எல்லா வசதிகளையும் செய்து கொள்ளத்தான் வேண்டும். மீனாட்சியின் போக்கே அலாதி. அவள்தான் உள்ளதைக் கொண்டு திருப்திப்படுபவள்'' என்று பொரிந்து தள்ளினாள்.

மாதவனின் தலையே சுழன்றது இதென்ன விபரீதம்? கோமதி எளிய வாழ்க்கையை விரும்புபவள் என்றும் அதனால் அவளை மணந்து கொண்டு வீட்டின் செலவைக் குறைத்து விட லாம் என்று அவன் எண்ணியது தவறா? அப்படியானால் மீனாட்சி எப் படி வாழ்கிறாள் என்று பார்க்க வேண் டும். அவள் அன்று கூறியபடி நகை களுக்கும் பட்டுப் புடவைகளுக்கும் ஆசைப்படுகிறாளா? வீட்டில் வேலைக்காரிகளை அமர்த்திக் கொண் டிருக்கிறாளா? அல்லது எளிய வாழ்வு தான் வாழ்ந்து வருகிறாளா? கோமதி சொன்னதெல்லாம் உண்மை தானா எனக் கண்டறிய கோவிந்தனின் வீட் டிற்கு ஓடினான். கோவிந்தனும் மீனாட்சியும் அவனை வரவேற்றார் கள். அங்கு மீனாட்சி எளிய முறையில் வாழ்வது கண்டு அவன் திகைத்தான். அவனை அவர்கள் சாப்பிடச் சொன் னார்கள். சாதமும் கீரை மசியலும் பரி மாறப்பட்டது கண்டு மாதவன் ஆச் சரியப்பட்டான்.

அப்போது மீனாட்சி ''என்ன திகைத்து விட்டீர்கள்? அன்று கிணற் றடியில் என் தோழி கோமதி கூறியது உங்கள் நினைவிற்கு வருகிறதா? அன்று அவள் மனதில் நினைப்பதை நான் வேடிக்கையாகக் கூற அவளும் நான் நினைப்பதை வேடிக்கையாக பதிலுக்கு கூறினாள் அதை நீங்கள் கேட்டுக் கொண்டிருந்ததையும் நான் கவனித்தேன்'' என்றாள். அதைக் கேட்டு மாதவன் திகைத்துப் போய் ''நான் தவறுதலாகப் புரிந்து கொண் டேன்'' என்றான். அப்போது மீனாட்சி யும் ''நான் அன்றே சொன்னேன் நாம் ஆசைப்படுவதெல்லாம் நடக்காது என்று! எனவே உள்ள நிலைமைக்குத் தக்கபடி நடப்பதுதான் புத்திசாலித் தனம்'' என்றாள்.

மாதவன் தனக்கு நல்ல படிப்பினை கிடைத்தது என எண்ணித் தன் வீட்டை நோக்கி நடந்தான்.



# போட்டோ வாக்கியப் போட்டி :: பரிசு ரூ.100

இந்தப் போட்டியின் வெற்றி பெற்ற தலைப்புகள் 1996 டிசம்பர் மாத இதழில் வெளியிடப்படும்.



MAHANTESH C. MORABAD



MAHANTESH C. MORABAD

★ தலைப்புகள் ஒரு வார்த்தையிலிருந்து நாலைந்து வார்த்தைகளுள் இருக்கலாம். இரு தலைப்புகளுக்கும் தொடர்பு இருக்க வேண்டும். ★ அக்டோபர் 20-ம் தேதிக்குள் போட்டிக்கான தலைப்புகள் எமக்கு வந்து சேர வேண்டும்.

★ எம்மிடம் வந்து சேர்ந்த தலைப்புகளில் நாம் சிறந்ததாகக் கருதும் தலைப்புகளுக்கு ரூ.100/– பரிசு. இது இரு தலைப்புகளுக்கும் சேர்ந்ததே. ★ தலைப்புகளை தபால் கார்டில் மட்டுமே எழுதி கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பவும்.

**'அம்புலிமாமா, போட்டோ வாக்கியப் போட்டி', சென்னை–600 026.**

## ஆகஸ்ட் மாதப் போட்டி முடிவு

| | |
|---|---|
| முதலாவது போட்டோ | **ஒன்றுடன் ஒன்றும் மனம்.** |
| இரண்டாவது போட்டோ | **கூடிக் களிக்கும் இனம்.** |
| பரிசு பெற்றவர் | **வி. லதா, பாளையங்கோட்டை - 2.** |




Printed by B.V. REDDI at Prasad Process private Ltd., 188, N.S.K. Salai, Madras 600 026 (India) and Published by B. VISHWANATHA REDDI on behalf of CHANDAMAMA PUBLICATIONS, Chandamama Buildings, Vadapalani, Madras 600 026 (India), Controlling Editor: NAGI REDDI.

AMBULIMAMA (Tamil) October 1996 Regd. No. M. 4863